

# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட **நிதி நிறுவனம்** துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சென்னை - 600 015.

### கன்கதார முதலீட்டுத் திட்டம்

**உங்கள் குழந்தை செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!**

ரூ. 50,000/- செலுத்துவீர். 10 ஆண்டுகளில் ரூ. 50,000/-ஐ திரும்ப பெறுவீர்.

மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் **ஒரு கோடியை** பெறுவீர்

### வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ. 580/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்.

### பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு* |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும்.
உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது
90 மாதங்களில் 4 மடங்காகிறது.

### காமதேனு மணிபேக் திட்டம்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 12,640/- | ரூ. 12,000/- | ரூ. 12,000/- | ரூ. 1,12,640/- |

### பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19.5%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

### செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

**உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா!** இதோ

ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,25,000/- பெறலாம்
ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்
**சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி**

**கடன்**
நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்.
வட்டி விதம் ரூ. 1.85

H.O. : Friday Holiday
B.O. : Tuesday Holiday
Business Hours
Week Days 9.00 A.M. - 1.00 P.M. &
2.00 P.M. - 6.00 P.M.

பங்குதாரர்களுக்கு மட்டும்

சேர்மன் P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
சீனியர் டிரஸ்டி
ஸ்ரீ கந்தகோட்டம்
சென்னை - 3.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

SURESH

**பாதுகாப்பு பெட்டகம் குறைந்த வாடகைக்கு கிடைக்கும்**

**சில நாட்களுக்கு முன்னால் பழைய உள்துறை அமைச்சர் பூட்டாசிங், 'பொற்கோயிலில் பக்தர்களின் காலணிகளைத் துடைத்தார், கோயிலைப் பெருக்கிச் சுத்தம் செய்தார்' என்று செய்திகள் வந்தன. இதன் பின்னணி என்ன? சென்னை குரு நானக் சத்சங் சபாவின் பொதுஜனத் தொடர்பு அதிகாரி கர்ஜித்சிங் சாஹ்னி சொல்கிறார் :**



பூட்டாசிங் : செருப்பு துடைத்தார்...

ஆபரேஷன் ப்ளூ ஸ்டார் என்ற பெயரில் 1984இல் பொற்கோயில் தகர்க்கப்பட்டது நினைவிருக்கலாம். அதன்பின் அரசுப் பணத்தில் பொற்கோயிலைச் சீரமைக்க ஏற்பாடு செய்தவர் உள்துறை அமைச்சராக இருந்த பூட்டாசிங். எந்த குருத்துவாராவும், சீக்கியர்களின் இலவச உழைப்பில்தான் (கர்சேவா) கட்டப்பட வேண்டும் என்பது சீக்கிய மரபு. ஆனால் பூட்டாசிங் அதை 'கவர்ன்மெண்ட் சேவா'வாக மாற்றி விட்டார். அதனால்தான் அகல் தக்தினால்

# பூட்டாசிங் செய்த தவறு என்ன?

மதத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்டார். இந்த அகல் தக்த் என்பது என்ன?

சீக்கிய மதத்தை ஸ்தாபித்தவர் குரு நானக். நான்காவது குரு ராம்தாஸ். இவர் காலத்தில்தான் பொற்கோயிலும் கட்டப்பட்டது. ஐந்தாவது குரு அர்ஜுன் தேவ்ஜி. எங்கள் மத நூலான கிரந்த் சாஹிப்பை உருவாக்கியவர் இவர். ஆறாவது குரு ஹர் கோவிந்த் சாஹேப். பொற்கோயிலுக்குள் மதநூல் வைக்கப்பட்டிருக்கும் ஹர்மந்திர் (மூல ஸ்தானம்) அருகில் அகல் தக்த் (Akal Takt) என்ற ஒன்றை உருவாக்கியவர் இவர்தான். அகல் தக்த் என்றால் கடவுளின் இருக்கை அல்லது கடவுள் தங்கியிருக்கும் இடம் என்று கொள்ளலாம். சீக்கிய மத குருமார்கள் அந்த இடத்தில் அமர்ந்து மத சம்பந்தமாகப் போதித்து வழிகாட்டியதுடன் மதத்திற்கு எதிராகச் செயல்படுபவர்களை விசாரித்துத் தீர்ப்பும் கொடுத்து வந்தார்கள்.



கர்ஜித் சிங் சாஹ்னி



பர்னாலா

பொற்கோயில்




ஜெயில் சிங்

அகல் தக்திலிருந்து கொடுக்கப்படும் தீர்ப்பு, கடவுளின் தீர்ப்பாகக் கருதப் படும். இப்போதும் ஐந்து ஜதேதார்கள் அகல் தக்தில் அமர்ந்து மதத்திற்கு எதிராகச் செயல்படு பவர்களைப் பற்றித் தீர்ப்புச் சொல்கிறார்கள். சீக்கிய மதத்தின் உயர்ந்த அமைப்பான ஷிரோண்மணி குருத் துவாரா பிரபந்தக் கமிட்டி (SGPC) இவர் களைத் தேர்ந்தெடுக்கிறது.

மதத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்ட பூட்டாசிங், இவ்வளவு வருட காலம் வேத னைப்பட்டு, மனசாட்சியின் உந்துதலால், பாவ மன்னிப்பு பெற அகல் தக்தை நாடி னார். மதத்திற்கு எதிராக அவர் செய்தது என்ன என்பதை பூட்டாசிங்கின் மனசாட் சியே நன்கு அறியும். ஏனென்றால், அகல் தக்தில் தண்டனை கொடுக்கும்போது குற்றப் பத்திரிகை படிப்பதில்லை.

**த**ண்டனை என்றால் ஏதோ கடுமை யாக இருக்கும் என்று எண்ணிவிட வேண் டாம். கடவுளுக்கும், குருத்துவாராவுக்கு வரும் பக்தர்களுக்கும் செய்யும் சேவை யைத்தான் தண்டனையாகக் கொடுக்கிறார் கள். உதாரணமாக பக்தர்களின் காலணி களை வாங்கித் துடைத்து வைப்பது, குருத் துவாராவைச் சுத்தப்படுத்துவது, சமைய லறையில் பாத்திரங்களைக் கழுவுவது, தவிர, கிரந்த் சாஹிப்பின் முன் அமர்ந்து கீர்த்தனைகள் பாடுவது என்ற ரீதியில்தான் தண்டனைகள் இருக்கும்.

பூட்டாசிங், இந்தியாவின் ஐந்து முக்கிய இடங்களில் உள்ள குருத்துவாராக்களுக்குச் சென்று தண்டனையை அனுபவிக்க வேண் டும். பொற்கோயில் விவகாரம் காரணமாக ஜெயில்சிங், கர்ஜித்சிங் பர்னாலா போன்ற வர்கள் அகல் தக்தினால் கொடுக்கப்பட்ட தண்டனையை நிறைவேற்றி மதத்தில் தங்களை மீண்டும் இணைத்துக் கொண்டுள் ளார்கள். ஏழையானாலும் சரி, பணக்கார னாக இருந்தாலும் சரி, அகல் தக்தின் முன்பு அனைவரும் ஒன்றுதான். மகாராஜா ரஞ்சித் சிங் கூட, அகல் தக்தினால் கொடுக்கப்பட்ட தண்டனையை ஏற்று நிறைவேற்றினார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

வாசகர் யோசனை :
நெல்லை குரலோன்

---



















## வளம் கொழிக்கும் மினி இந்தியா!

உலகிலேயே இந்திரனுக்கு உள்ள ஒரே கோவில் இங்கேதான். கடோத்கஜா காலனி, கலியமர்த்தன், மதுரா என்று ஊர்கள் பெயர். தேவி, ஜெயா, விஜயா, ஆத்மா, மேகவதி, பரவர்த்தி என்று பெயர்கள். கணவனை ''ஸ்வாமி'' என்று கூப்பிடுகிறார்கள். மனைவியை ''ஸ்த்ரீ'' என்று கூப்பிடுகிறார்கள்!

ராமாயணா ஹோட்டல் இருக்கிறது. 30 அடி உயர சஞ்சீவி மலையைத் தூக்கிய ஹனுமான் சிலை, 40 அடி நீள கீதோபதேசச் சிலை முக்கிய சாலை சந்திப்புக்களில் இருக்கின்றன. ஸ்டேடியம் பெயரே அர்ஜுன்! பேசும் மொழியில் 80% சுத்தமான கலப்படமற்ற சமஸ்கிருதம்.



✱ மிளிரும் கலையழகு....




✱ பாலி : புகழ்பெற்ற ஆலயம்...

இதெல்லாம் எங்கே? இந்தோனேஷியாவில்!

ஆனால் - இந்த நாட்டில் இன்றைய இளைய தலைமுறையினர் 90 சதம் பேருக்கு இந்தியா என்ற ஒரு நாடு இருப்பதோ, இந்து மதத்தின் பிறப்பிடமே, ஆணி வேரே அந்த நாடுதான் என்பதோ தெரியாது! ''சமஸ்கிருதமா? எங்களுக்குத் தெரியாது. எங்கள் மொழி ஜெர்மன் மொழியுடன்தான் சம்பந்தம் கொண்டது'' என்று பெருமையாகச் சொல்கிறார்கள்!

எண்ணெய் வளம், இயற்கை வளம் கொழிக்கும் இந்தோனேஷியா, சுமார் 5 அல்லது 6 ஆண்டுகளுக்கு முன்பு முழுவதுமாகத் தன் பொருளாதாரத்தை வெளி உலகுக்குத் திறந்து விட்டவுடன் மடமடவென்று உள்ளே நுழைந்து ஸ்திரப்படுத்திக் கொண்டுவிட்டவர்கள் அமெரிக்கர், ஜப்பா

# ஒரு லிட்டர் பெட்ரோல் ஒரு ரூபாய் பத்து பைசா!

ஷியர், கொரியர்கள். வெளிநாட்டவர் சொத்து வாங்கலாம் என்று அரசாங்கம் சட்டம் கொண்டுவரச் செய்யுமளவுக்கு இந்த நாட்டின் இயற்கை எழிலை இரசித்துக் கொண்டு வேரூன்றி விட்டார்கள்.

பெரிய பெரிய வங்கிகளில் உயர் பதவிகளில் இருப்பவர்கள் தமிழர்கள். C. A., ICWA முடித்தால் இங்கே வேலை நிச்சயம். 300, 400 வருடங்களாக இங்கே வசிக்கும் ஹிந்துக்கள் இருக்கிறார்கள். இவர்கள், தமிழர்கள், சிந்திக்கள். பெரிய பெரிய தொழிற்சாலைகளை நிர்வகிக்கிறார்கள்.

இன்று இந்தோனேஷியா, 90% இஸ்லாம் மதத்தைத் தழுவியதாயினும் இந்துக்களும் இஸ்லாமியர்களும் கைகோர்த்து வாழ முடியும் என்று நிரூபிக்கிறது. கல்யாணத்திலே வாழைமரம், கொழுக்கட்டை நைவேத்தியம், முருங்கை மரத்தில் பேய் என்று அவர்கள் பழக்கங்களையும் நம்பிக்கைகளையும் சொல்ல நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ''மஞூதி இடிப்பு'' என்ற பிரசாரம் கொஞ்சமாகக் கிளம்பி உள்ளது. இதை முளையிலேயே கிள்ளி எறியும் பொறுப்பு நம்மவர்களுடையது. வளர விடுவது ஆபத்து.

**365** நாட்களும் இடி மின்னலுடன் மழை. பூமத்திய ரேகைப் பிரதேசமானதால் உஷ்ணப் பகுதி காடுகள். தெரு ஓரமெல்லாம் மூங்கில், கரும்பு, மா, பலா, வாழை, ஆவாரம்பூ என்று செழுமையாக வளர்ந்திருக்கின்றன. ஜகார்த்தாவை மடமட வென்று வெளி நாட்டவர் உதவியுடன் உலகிலேயே அழகான ஒரு நகரமாக உருவாக்கி விட்டார்கள். குறுக்கும் நெடுக்குமாக ஓடும் கால்வாய்களால் மழைத் தண்ணீர் நிமிடத்தில் வடிந்து விடுகின்றது.

இஸ்லாமிய இந்தோனேஷியாவில் இந்து கலாசார பாலி (Bali) சுற்றுலா பயணிகளைக் கவரும் முக்கிய இடமாக இருக்கின்றது.

இந்தோனேஷியாவின் 3000 தீவுகளில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து அவற்றின் முக்கிய அம்சங்களைச் சிறிய அளவிலே ''தமன் மினி'' என்று ஜகார்த்தா அருகிலேயே கட்டி வைத்திருக்கிறார்கள். சுற்றிப் பார்த்தவுடன் முழு நாட்டையே சுற்றிப் பார்த்த திருப்தி. அவரவர்கள் எங்கெங்கே போக வேண்டுமோ, அந்த இடத்தைத் தேர்ந்தெடுக்க அருமையான வாய்ப்பு. இதையெல்லாம் நாம் கற்றுக் கொண்டு செயல்படுத்துவது எப்போது?

பச்சைப் பசேலென்ற இயற்கை வளம்; இலை போட்டுச் சாப்பிடலாம் என்ற அளவு சுத்தமான சாலைகள்; அழகான பெண்கள் - வெளிநாட்டவர் வந்து குவிகிறார்கள். ''இங்கே வந்து கோல்ப் விளையாடுங்கள் பசும்புல்வெளியிலே!'' என்று விளம்பரப் படுத்துகிறார்கள்.

கரும்பு விளைச்சலால் பேப்பர், சர்க்கரை தொழிற்சாலைகள் அதிகம். விவசாயம் முக்கியத் தொழில். விவசாயக் கருவிகளுக்குக் கிராக்கி மிகவும் அதிகம். அடுத்து ஹோட்டல் தொழில் மிகமிக உன்னதம்.

இங்கே பெட்ரோல், லிட்டர் ரூ. 1.10 பைசா (ஒரு ரூபாய் பத்து பைசா)! சுமார் 70 மில்லியன் கார்கள் இருப்பதாகக் கணக்கிட்டு இருக்கிறார்கள். போக்குவரத்து நெருக்கடி முக்கிய சாலைகளில் அதிகம். ஒரு சட்டம் போட்டிருக்கிறார்கள். நெருக்கடி நேரத்தில் ஒரு காரில் குறைந்தபட்சம் 3 பேர் போக வேண்டுமென்று. அதனால் சிறுசிறு குழந்தைகள் (சுமார் 10 வயது முதல் 17 வயது வரை) சாலை ஓரங்களில் கைகாட்டி நிற்கிறார்கள். தனியே காரில் செல்பவர்கள் அவர்களைத் தெருவின் ஒரு முனையில் ஏற்றிக் கொண்டு (எண்ணிக்கைக்காக) மறு முனையில் இறக்கிவிட்டு விடுகிறார்கள். இதற்குக் குழந்தைகளுக்குத் தரப்படும் கூலி சுமார் ரூ. 5! நல்ல எண்ணத்தில் போடப்பட்ட ஒரு சட்டம், குழந்தைகள் படிக்காமல் குறுக்கு வழியில் சம்பாதிக்கத் துணை போயிருப்பது வருத்தத்தை அளிக்கிறது!

இந்தோனேஷியாவிலிருந்து :
**கிருத்திகா**



கணவன் : டார்லிங்! என்னை உனக்குப் பிடிச்சிருக்கா?

நடிகை : பிடிக்காமலா நாலு மணி நேரமா உங்ககூட வாழ்ந்துக்கிட்டு இருக்கேன்!

- வி. சி. கிருஷ்ணரத்தினம்

# Kalki Shopping Page

STEP IN FOR
Raymond's
DIGJAM
SUITINGS & SHIRTINGS

**NEWLOOK** TAILORS

WE ACCEPT CREDIT CARDS

Opp. : T. Nagar Bus Terminus
Madras - 17 Phone : 44 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress to make the bride proud

---

சென்னை மாநகராட்சி
எல்லைக்கு உட்பட்ட

**வீட்டின் பேரில் கடன்**

குறைந்த வட்டிக்கு!
விரைந்த சேவை!!

**திரு.வி.க.நகர் பெனிஃபிட் ஃபண்ட் லிமிடெட்**

தலைமை அலுவலகம் :

10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யூ,
(திரு. வி. க. நகர் பஸ் நிலையம் அருகில்)
சென்னை - 600 082. போன் : 610390

வேலை நேரம் : 9.00 முதல் 12.30 வரை
2.00 முதல் 5.00 வரை ஞாயிறு விடுமுறை

பாரீஸ் கிளை :

49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி,
(பட்டணம் கோவில் அருகில்), பார்க்டவுன்,
சென்னை - 600 003. போன் : 565760

வேலை நேரம் : 10.00 முதல் 1.00 வரை
2.00 முதல் 5.00 வரை ஞாயிறு விடுமுறை

---

• PEARLS • AMERICAN DIAMONDS • BIRTH STONES • SEMI PRECIOUS

• CORALS BIG SIZE

MOHAN MALA GOLD BEADS

JEWELLERY

• CORAL FLOWERS

*We Don't Announce These Offers*

- ▷ Buy One Take One Free
- ▷ 50% Discount On Pearls
- ▷ No Making Charges
- ▷ 10% Less Till ................
- ▷ Pearls at Rs. 600/-Per gm. Rs. 300/- Per gm. only

*We Only Offer*

- Quality Hyderabad Pearls and Gems at Hyderabad Prices itself.

*We Announce*

- Novel Gift ideas this Pongal to suit your budget, taste & class.
- **Whoever bring this advertisement cutting will be given 10% Discount.**

VISIT US
ONCE TO
SEE THE DIFFERENCE

**NARAYANA pearls**

Shop No. 4, Basement, Kasi Arcade, 116, Thyagaraya Road, T. Nagar, Madras - 17.

COME AND REPAIR YOUR PEARL SETS (PURCHASED ANYWHERE) WITH OUR SPECIALIST. FREE OF COST.

# Kalki Shopping Page

## பட்டுப் புடைவைகள் உலகில் புரட்சி! புதுமை!! சிக்கனம்!!!

**கமலா :** என்ன மாமி, நீங்கள் கட்டிக் கொண் டிருப்பது புதுப் புடைவையா! எங்கே வாங்கி னீர்கள்?

**லக்ஷ்மி :** இல்லை. இது ஸ்ரீராம்லோக்கில் என்னுடைய பழைய பட்டுப் புடைவையைக் கொடுத்து கலர் போட்டு வாங்கிக் கொண் டிருக்கிறேன். அதுதான் புதுப் பொலிவுடன் இருக்கிறது. நீயும் பழைய பட்டுப் புடைவை யைக் கொடுத்து கலர் மாற்றிக் கொள்ள லாம்.

மேலும் சிக்கனத்திற்கு - இந்த விளம்பரத்தைக் கொண்டு வருபவர்களுக்கு

**5% தள்ளுபடி!**

## SRI RAMLOK & CO

74, Ranganathan Street
(Ground Floor),
Opp. : Star Bazaar,
T. Nagar, Madras - 17.

மேலும் விவரங்களுக்கு :

R. Vasudevan Phone : 445697



## உலக தையற் கலைஞன்

12 ஆம் ஆண்டில் நடைபோடும்
'உலக தையற் கலைஞன்' - மாத இதழ்
(உலகெங்கும் செல்லும் தையற்கலை மற்றும் பரதக் கலை ஏடு)

ஏப்ரல் 15 முதல், புதிய பகுதிகள் தாங்கி வருகிறது.

- தையற் கலைப் பாடங்கள்
- பரதக் கலைச் செய்திகள்
- சித்திரத் தையல்
- ஆரம்பத் தையற் பயிற்சி
- புகழ்பெற்ற பரதக் கலைஞர்கள்
- தையற்கலை வல்லுநர்கள் - நேர்காணல்
- புதிய டிசைன் உடைகள் வண்ணத்தில்
- முத்துக்கள்
- கவிதைகள்
- பெண்களுக்கு உபயோகமான தகவல் களஞ்சியம்

- முன் பணம் கட்டக் கூடிய ஏஜெண்டுகள் தொடர்பு கொள்ளவும்.

நிர்வாகி,

**உலக தையற் கலைஞன்**

12/2-C, C. P. கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 73783

**தங்க நகையில் மங்கையர் எண்ணம் எங்கள் கைவண்ணம்**



22ct தங்கம், வைர, வெள்ளி நகைகளுக்கு



## சாந்தி கோல்டு ஹவுஸ்

எங்கள் நகை சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து பயன்பெறுங்கள். சேரும் அங்கத்தினர்களுக்கு மாதாந்திர தவணைத் தொகைக்கு ஏற்ற பரிசுப் பொருள் அளிக்கப்படும்.

72, உஸ்மான் ரோடு,
தி. நகர், சென்னை - 600 017.
Phone : 441730.

Customer service since 1958 and in
The Process of Growing
A prestigious show room
for a complete range of
Building Materials

## Rahman Sanitary Stores

*Authorised Stockist for :*

PARRYWARE, DECORA GLAZED TILES JAQUAR BATHROOM FITTINGS, DIAMOND STAINLESS STEEL KITCHEN SINKS, 'R' BRAND GI FITTINGS AND ASIAN PAINTS

Phones : 8280087,
8281547, 447626.
151, North Usman Road,
T. Nagar, Madras - 600 017.

# Kalki Shopping Page



* பாகிஸ்தான் ஆதரவுடன் ஊடுருவும் பயங்கரவாதிகள் : தொல்லையின் விளிம்பில் மக்கள்...

**காஷ்மீர் :**

# க்ளின்டன் தலையீடு

* காவலுக்கு குறைவில்லை. கஷ்டத்துக்கும்....



'காஷ்மீர் ஒரு சர்ச்சைக்குரிய விஷயம்' என்று சமீபத்தில் சொன்னார் க்ளின்டன். அவரது உதவிச் செயலாளரான ராபின் ரபேல் ஒரு படி மேலே போய், 'காஷ்மீர் இந்தியாவுடன் இணைந்ததே சரியான விதத்தில்தானா?' என்ற கேள்வியை எழுப்பி னார். இப்படியாக க்ளின்டன் நிர்வாகம், காஷ்மீர் விவகாரத்தில் அநாவசியமாக மூக்கை நுழைத்துக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் காஷ்மீர் பிரச்னை பற்றியும் பாகிஸ்தானின் பொய்ப் பிரசாரம், அமெ ரிக்காவின் போக்கு ஆகியவற்றைப் பற்றி யும் முன்னாள் வெளியுறவுச் செயலர் கே.பி. எஸ். மேனன் சுருக்கமாகக் கூறுகிறார் :

"காஷ்மீரில் மனித உரிமைகள் மீறப் படுவது பற்றிய பாகிஸ்தானின் கவலையில் தாங்களும் பங்கு கொள்வதாக அமெரிக்க ஜனாதிபதி க்ளின்டன் சொல்லியிருப்பது அநியாயம், அக்கிரமம்" என்று அதிரடியாய் ஆரம்பிக்கும் கே. பி. எஸ். மேனன் தொடர்ந்து பேசுகிறார் :

"இந்தியாவும் பாகிஸ்தானும் சுதந் திரம் அடைந்தபோது காஷ்மீர், ஹரிசிங் என்ற மகாராஜாவின் கையில் இருந்தது.

எந்த நாட்டுடன் இணைவது என்ற விஷயத்தை அவர் முடிவெடுக்கும் முன் பாகிஸ்தான், ஆக்கிரமிப்பாளர்களை காஷ்மீருக்குள் அனுப்பியது. ஹரிசிங்குக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. இந்தியாவின் உதவியை நாடினார். அப்போது இந்தியா, 'உங்கள் பகுதிக்குள் நுழைந்து, எங்கள் ராணுவம் செயல்பட முறையான அனுமதி கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டது. பாகிஸ்தானின் அடாவடித் தனத்தைக் கண்ட ஹரிசிங் காஷ்மீரை இந்தியாவுடன் இணைப்பதுதான் சரி என்று முடிவெடுத்து இணைக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டார். அதன்பின் இந்திய ராணுவமும் ஆக்கிரமிப்பாளர்களைத் துரத்தியது. நேரு இந்த விஷயத்தை ஐ. நா. சபைக்குக் கொண்டு போனார். அவர்கள் பார்வையாளர்களை அனுப்பினார்கள். ஆக்கிரமிப்பாளர்கள் தாங்கள் பிடித்த இடங்களிலே தங்களை நிலைநிறுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். ஐ. நா. சபை, மிகுந்த நடுநிலையுடன் செயல்படும் என்ற எண்ணத்தில்தான் நேரு, அங்கே விஷயத்தை எடுத்துச் சென்றார். ஆனால் ஏமாற்றம் தான். ஆக்கிரமிப்பாளர்கள் பிடித்த இடம் தான் இப்போது POK (Pakistan Occupied

களையும், கோட்பாடுகளையும் எங்களுடன் இணைத்துக் கொள்கிறோம்' என்றார் ஷேக் அப்துல்லா.



கே. பி. எஸ். மேனன்

''தெற்கு ஆசியாவில், அப்போது வல்லரசாக இருந்த சோவியத் யூனியனுக்கு எதிராகச் செயல்பட ஒரு தளம் தேடிக் கொண்டிருந்த அமெரிக்காவுக்குப் பாகிஸ்தான் தோதாகப் பயன்பட்டது. 1955 இல் அமெரிக்க ஜனாதிபதியாக ஐசனோவர் இருந்த போது பாகிஸ்தானுக்கு ஆயுதம் கொடுக்க ஒப்பந்தம் போடப்பட்டது. இதை நேரு அப்போதே எதிர்த்தார். இந்தியாவுக்கு எதிராக அந்த ஆயுதங்கள் பயன்படுத்தப்படும்' என்ற அவரது கருத்து அடுத்து வந்த போர்களில் உண்மையானது.

''ஆனால், அமெரிக்கா இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளையைத் தொடர்ந்து வந்தது. இதே காலகட்டத்தில் பஞ்சாபிலும், காஷ்மீரிலும் தலையெடுத்துக் கொண்டிருந்த தீவிரவாதிகளுக்குப் பயிற்சியும் ஆயு

# தேவையா?

Kashmir) என்றழைக்கப்படுகிறது. இந்தியா ஐ.நா. சபைக்கு விஷயத்தை எடுத்துச் செல்லாமல், ஆக்கிரமிப்பாளர்களை பாகிஸ்தானுக்குள் விரட்டியிருந்திருக்க வேண்டும். தவறி விட்டோம். அப்போது தொடங்கிய தலைவலி இன்னமும் விட்டபாடில்லை.

''காஷ்மீர் நம் கைக்கு வந்தவுடன் ஜனநாயக உரிமைகளை மதிக்கும் விதத்தில் தேர்தல்கள் நடத்தப்பட்டன. சில சிறப்புச் சலுகைகளும் வழங்கப்பட்டன. 'பாகிஸ்தானில் உள்ளவர்களும் நாங்களும் ஒரேவிதமாக இருக்கலாம். ஆனால், இந்தியாவினுடைய லட்சியங்



நேரு



ராபின் ரபேல்



ஷேக் அப்துல்லா



புட்டோ



ஐஸனோவர்



பேநசீர்

தங்களும் வழங்கி வன்முறைக்கு வழி செய்து கொண்டிருந்தது பாகிஸ்தான். அதிலும் காஷ்மீர் இஸ்லாமியப் பிரதேசமாக இருந்ததால், எல்லையைக் கடந்து வருவதும், பொய்ச் செய்திகளைப் பரப்புவதும் பாகிஸ்தான் தயாரித்து அனுப்பிய தீவிரவாதிகளுக்கு எளிதாக இருந்தது. துப்பாக்கி கலாசாரத்தை அமுல்படுத்தி, உள்ளூர் மக்களை ஓட வைத்தனர் தீவிரவாதிகள். காஷ்மீரப் பண்டிதர்களும் வேறு பல மக்களும் ஏராளமாக அகதிகளாக வெளியேறி தில்லி வட்டாரத்தில் முகாம்களில் வாழ நேர்ந்தது. அப்பாவிகள் கொல்லப்பட்டனர். பணயக் கைதிகளாக அதிகாரிகள் சிறைப்பிடிக்கப்பட்டு, கொல்லப்பட்டனர். வேறு வழியில் பார்த்தால் ராணுவம் தீவிரமாகச் செயல்பட வேண்டியதாயிற்று.

''க்ளிண்டன் இந்தப் பின்னணியைக் கண்டு கொள்ளாமல், கருத்துக்களைச் சொல்கிறார். தீவிரவாதிகளை ஊக்குவிக்கும் பாகிஸ்தானை அவர் கண்டிக்க வேண்டும். மாறாக, மேலும் ஆதரவு தரத் துணியும் விதமாக அவர் பாகிஸ்தான் பக்கம் பேசுவது கொஞ்சமும் சரியல்ல.

''அமெரிக்க செனட்டரான பிரஸ்லர், பாகிஸ்தானுக்குக் கொடுக்கும் ஆயுத சப்ளைக்கு உச்சவரம்பு வைக்க வேண்டும், ஏனென்றால் அது அணு ஆயுதம் தயாரிக்கிறது என்ற தீர்மானத்தை அமெரிக்க காங்கிரஸில் கொண்டு வந்தார். ஜார்ஜ் புஷ் இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டார். ஆனால் பின்னால் வந்த க்ளிண்டன், சாமர்த்தியமாகத் தீர்மானத்தைச் சற்று வளைத்து பாகிஸ்தானுக்கு உச்சவரம்பில்லாமல் ஆயுதம் சப்ளை செய்வதைத் தொடரத் திட்டம் போட்டார். அத்திட்டத்தை பிரஸ்லர் வெளிச்சம் போட்டுக் காட்டிவிட, க்ளிண்டன் தடுமாறிப் போனார்.

''சோவியத் யூனியன் சிதறிப் போன நிலையில், உலகத்திலேயே தான்தான் பெரியவன் (Big Brother attitude) என்ற எண்ணத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார் க்ளிண்டன். தெற்கு ஆசியாவில் பாகிஸ்தானைத் தளமாகப் பயன்படுத்தி, பிரிந்து போன சோவியத் குடியரசுகளில் குழப்பம் விளைவிக்கப் பார்க்கிறார். போஸ்னியா விவகாரமாகட்டும், ஈராக் விவகாரமாகட்டும், தன் சொல்தான் எடுபட வேண்டும் என்று செயல்படுகிறார். உலக நாடுகள் அனைத்துமே இவருக்கு வால்பிடித்துக் கொண்டிருக்க முடியுமா என்ன?

''இஸ்லாமியர்கள் என்ற அடிப்படையில், உலகில் உள்ள இஸ்லாமிய நாடுகளைத் தனக்கு ஆதரவாகச் சேர்த்துக் கொள்ளும் முயற்சியில் இறங்கியிருக்கிறது பாகிஸ்தான். உலகிலேயே அதிக முஸ்லிம்கள் வசிக்கும் நாடு இந்தியாதான். இங்கு, பல்வேறு சமயத்தினர் சகோதரர்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இஸ்லாமியர் என்ற அடிப்படையில், பாகிஸ்தான் செயல்படும் போக்கு, இந்தியாவில் உள்ள சில கட்சிகளால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டால், இங்கே சகோதரர்களாக இருப்பவர்கள் மத்தியில் பிளவு ஏற்படும். இதை மற்ற இஸ்லாமிய நாடுகள் உணர வேண்டும்.

''ஐ. நா. சபையின் மனித உரிமை மாநாட்டில், காஷ்மீர் பற்றிய தீர்மானம் கொண்டுவர பாகிஸ்தான் முயன்று கொண்டிருக்கிறது. இதற்குப் பாகிஸ்தானுக்குக் கொஞ்சமும் அருகதை கிடையாது. ஏனென்றால் சிந்து பகுதியில், பாகிஸ்தான் ராணுவம் செய்யும் மனித உரிமை மீறல்கள் கொஞ்சநஞ்சமல்ல.

''கடந்த காலத்தைவிட, இந்த முறை பதவிக்கு வந்தவுடன் பேநசிருக்கு இந்திய எதிர்ப்பு கொஞ்சம் அதிகமாகவே இருக்கிறது. இதற்குக் காரணம் பாகிஸ்தான் ராணுவத்தைத் தமது பிடிக்குள் வைத்துக் கொள்ள நினைக்கும் அவரது போக்குதான். இந்திய எதிர்ப்பு நிலை எடுப்பவரை ஆதரிப்பதே பாக். ராணுவத்துக்கு வழக்கம். தேர்தல்கள் மூலம் பிரதமர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் பாகிஸ்தானில் ராணுவத்தின் விருப்பப்படிதான் ஆட்சியாளர்கள் நடக்க வேண்டியிருக்கிறது. சென்ற முறை இதை உணராது பதவியைக் கோட்டைவிட்ட பேநசீர், இப்போது புரிந்து கொண்டு செயல்படுகிறார். இரண்டு நாடுகளுக்கிடையில் உள்ள பிரச்னைகள் அவரது தகப்பனாரே கையெழுத்திட்டுள்ள சிம்லா ஒப்பந்தத்தின் அடிப்படையில் பேசித் தீர்க்கப்பட வேண்டும் என்பதைக் கூட அவர் மறந்துவிட்டார் போலிருக்கிறது; அல்லது மறந்துவிட்டது போல் நடிக்கிறார்.

''பாகிஸ்தானின் பொய்ப் பிரசாரத்தை முறியடிக்க, இந்தியா திறமையாகச் செயல்பட வேண்டும். தீவிரவாதிகளுக்குப் பயிற்சி மற்றும் ஆயுதங்கள் பாகிஸ்தானால் வழங்கப்படுவதைப் பற்றிய கண்டனத்தை மற்ற நாடுகளில் வெளியிடச் செய்ய வேண்டும். பாகிஸ்தான் ஒரு பயங்கரவாத நாடு என்று அறிவிக்கும் அளவுக்கு நமது ராஜீய உறவுகளைச் சர்வதேச அரங்கில் பயன்படுத்திச் செயல்பட வேண்டும். ஏற்கெனவே வெளிநாட்டுத் தூதுவர்களைக் காஷ்மீருக்குள் அழைத்துச் சென்று நிலைமையை அவர்களே நேரில் காண ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மேலும் தீவிரமாக ராஜதந்திரங்களைக் கையாண்டால் பாகிஸ்தானின் பொய்ப் பிரசாரம் கட்டுப்படுத்தப்படும்.''

சந்திப்பு : ப்ரியன்

அம்மாவுக்கு 460 கட்-அவுட்...
மதுசூதனன்
46 தொகுதில ஜெயிச்சதுக்கு வெள்ளிக் கொலுசு...
இந்திரகுமாரி
இந்தக் காணிக்கைக்கு 46 தடவை சுவத்துல முட்டிக்கிட்டாலும் போதாது!
வாழப்பாடி மேல 46 அவதூறு வழக்கு...
எஸ்.டி.எஸ்.
விலைவாசியை 46 மடங்கு உசத்திடலாம்...
46 இடங்கள்ல டிராபிக்கை டைவர்ட் பண்ணணும்...
ராஜகோபாலன்

எங்க அக்னி வெற்றிதான்! ஆனாலும் உங்க ராக்கெட்டை அதால எட்டிப் பிடிக்க முடியாதுய்யா!
விஞ்ஞானி
அக்னி ஏவுகணை
பட்ஜெட்டுக்குப் பிற்பட்ட விலையேற்றங்கள்
வாவ்! இதுக்கே அசந்துட்டீங்களே! இன்னும் ரெண்டு ராக்கெட் கிளம்புது பாருங்க!
மன்மோகன் சிங்
பெட்ரோல்
ரயில்வே பட்ஜெட்

தமிழகத்துல விடுதலைப்புலிகள் நடமாட்டம் அதிகமாயிருக்கு, நீங்க தாங்குறீங்க!
வாழப்பாடி
தமிழக மீனவர்களை இலங்கை கடற்படை தாக்குது... உங்களோட மத்திய அரசு தாங்குது!
மீனவர்களை புலிகள்தான் தாக்குறாங்க... எல்லாம் நீங்க இருக்குற இடந்தான்!
இலங்கை அரசு




# கல்கி



1994
மார்ச் 6
மலர் : 52
இதழ் : 32
ஸ்ரீமுக
மாசி 22


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## சேஷனுக்கு ஆபத்து?

இந்த நாட்டில் முதுகெலும்பு உள்ள ஒரே மனிதராக இன்று கருதப் படுகிறவர் சேஷன். சொல்லும் செயலும் ஒன்றிப்போக, பல விஷயங்களில் அவரது கண்டிப்பும் பிடிவாதமும் வெற்றி பெற, மக்களின் பாராட்டையும் நன்றியறிதலையும் பெற்றுள்ளார். ''நம்ம அடாவடி அரசியல்வாதிகளுக்கு இந்த மாதிரி அச்சமற்ற ஒரு ஆளுதாம்பா லாயக்கு; பல்லுத் தட்டி கையில் தந்துருவாரு''என்று திண்ணைப் பேச்சுக்கள் தாராளமாகவே நடக்கின்றன.

என்றாலும் சமீபகாலமாக, 'சேஷன் ஓர் அளவுக்கு மீறிப்போகிறாரோ?' என்ற கவலையும் நாட்டு நலனில் அக்கறை கொண்ட பலரிடம் உருவாகி வரு கிறது. தேர்தல் விதிகளில் அவர் செய்துள்ள சமீபத்திய திருத்தம், அச்ச மின்மை என்ற எல்லையை மீறிய ஒரு சர்வாதிகாரப் போக்கைக் கூட உணர்த்துகிறது.

'வாக்காளருக்கு அடையாள அட்டை வழங்க வேண்டும்' என்று சில காலம் முன் அவர் சொன்னது சரி. ஆனால் 'அடையாள அட்டை வழங்காது போனால் தேர்தலே நடத்த மாட்டேன்' என்று கூறுவது ஜனநாயகத்தையே கைவிடுவதாகும் அல்லவா? அடையாள அட்டைகள் வழங்குவதில் அரசுக்கு மெய்யாகவே பல சிரமங்கள் உள்ளன. குறிப்பாக அதற்கு ஆகக் கூடிய இமாலயச் செலவு. அப்படி செலவு செய்து தந்தாலும் படிப்பறிவு கூட இல்லாத நமது பாமர மக்கள் அதைப் பாதுகாப்பார்களா; அழுக்கேறாமல், கிழிக்காமல் பத்திரப்படுத்துவார்களா, தெரியாது. ஏன், ரேஷன் கார்டுபோல அடமானம் வைத்துக் கடன் கூட வாங்கிவிடலாம்! இப்படி சிந்தனைக்கும் விவாதத்துக்கும் உரிய எத்தனையோ விஷயங்கள் உள்ளன. சேஷன், தமது உத்தரவுகளை நிறைவேற்ற வேண்டியது அரசின் கடமை என்ற ரீதியில் செயல் படாது, அரசுடன் ஆலோசனைகள் நடத்தி வழிமுறைகளை ஆராய்வதுதான் நல்லது. செயல்திறன் செருக்காக மாற அனுமதிக்கக் கூடாது.

தேர்தல் சமயத்தில் வேட்பாளர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நன் னடத்தை விதிமுறைகளைத் தேர்தல் கமிஷன் ஏற்கனவே வகுத்திருக்கிறது. இப்போது, 'இந்த விதிமுறைகள் மீறப்பட்டால் அந்தக் கட்சியே தேர்தல் கமிஷனால் நிராகரிக்கப்படும்; கட்சிச் சின்னம் பறிமுதல் செய்யப்படும்' என்று திருத்தம் செய்திருக்கிறார் சேஷன். மேலெழுந்தவாரியாகப் பார்க்க, இதுவும் நெஞ்சுரம் மிக்க சேஷனின் ஒரு பாராட்டப்பட வேண்டிய செயல் என்றே தோன்றும். ஆனால் கூர்ந்து நோக்கினால், அவர் அதிகாரங்களை அளவுக்கு அதிகமாகத் தம்மிடம் குவித்துக் கொள்வது புரியும். மேலே குறிப் பிட்ட நன்னடத்தை விதிமுறைகள் சட்டபூர்வமானவை அல்ல. அறிவுரை என்ற அளவிலேயே உள்ளவை. ஆக, சட்டபூர்வமில்லாத ஒன்றின் மீது தீர்ப்பு வழங்கும் அதிகாரத்தை சேஷன் தமக்குத் தாமே வழங்கிக் கொள்வதாகிறது. ஒரு கட்சி பூரண மெஜாரிடி பெறக் கூடிய நிலையில், ஒரே ஒரு வேட்பாளரின் தவறான நடத்தை மீது சேஷன் எடுக்கும் நடவடிக்கை, ஆட்சியையே குலைத்து விடலாம். எந்த ஒரு தனிமனிதனுமே தவறுகளுக்கு அப்பாற்பட்ட வனல்ல என்னும்போது, சேஷனின் ஒரு தவறான முடிவு தேசத்தையே பேராபத்துக்கு உள்ளாக்கக் கூடிய வாய்ப்பு உள்ளது.

எனவேதான் தனிநபர் கமிஷனாக இராமல் மேலும் இருவரை கமிஷனில் சேர்க்க அரசு முயன்றது. அதுவும் சேஷனால் நிராகரிக்கப்பட்டு, தற்போது உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு அந்தப் பிரச்னை விடப்பட்டிருக்கிறது. தமது அதிகாரம் குறைக்கப்படுவது குறித்தோ, தமது பதவிக்கு வேட்டு வைக்கப் படுவது பற்றியோ சேஷன் கவலைப்படாமலிருக்கலாம்; வெளிப்படையாகக் கூறியும் உள்ளார். ஆனால், பதவி துறப்பது என்பது அவருக்கு எளிது. பதவியைத் தக்க வைத்துக் கொண்டு பற்றற்ற மனத்துடன் மக்கள் பணி ஆற்றுவதே கடினம்.

சேஷன் கண்டிப்புக்காட்டி கடமையாற்றும்போதே, கருணைகாட்டி பல் வேறு கட்சிகளை அணைத்துச் செல்லவும் வேண்டும். நல்லறிவு புகட்டி நலன் விளையச் செய்ய வேண்டும். மமதை என்று கருதத்தக்க அளவில் அவர் நடந்து கொள்ள, எல்லாக் கட்சிகளுமாகச் சேர்ந்து அவரை வீட்டுக்கு அனுப்பி விட்டால், பிறகு சேஷனால் நாட்டுக்கு என்ன நன்மை செய்ய முடியும்?

# வில்லுடைய வேலவன்

நவபாரதத்தின் திருக்கோவில்கள் என்று பண்டித நேரு ஒரு முறை பிரும்மாண்டமான தொழிற்சாலைகளைப் பற்றிக் குறிப்பிட்டார். அப்படி ஓர் 'ஆலயம்'தான் நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கம்.

நெய்வேலி வழியாக வருகிறவர்களின் கண்களில், கன்வேயர் பெல்ட்டுகளில் ஊர்ந்துவரும் கரித்தூளும், மலை மலையாக வெட்டியெடுக்கப்பட்ட மணலின் 'செங்குன்றங்'களும், புகையெழுப்பும் ஆலைக் குழாய்களும் கட்டாயம் படும்.

ஏழெட்டு கிராமங்களை வளைத்துப் போட்டுக் கையகப்படுத்தி, சுரங்க நிறுவனம் அமைத்தபோது வயல் வெளிகள், வீடுகள் எல்லாவற்றையும் இயந்திரங்கள் 'மேய்ந்து' சமப்படுத்தின. ஆனாலும் பழம்பெருமை வாய்ந்த வேலுடையான்பட்டு சிவசுப்பிரமணிய சுவாமி கோவில் எப்படியோ தப்பித்தது. உண்மையில் இது 'வில்லுடையான்பட்டு' என்றே வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.

ஏனெனில் இங்கே வள்ளி தெய்வயானை சமேதராகக் காட்சிதரும் முருகன் கையில் இருப்பது வில்லும் அம்பும்தான்! சந்நிதியில் மட்டும் வரிசை ஒழுங்கோடு வேல்கள் பதிக்கப்பட்டிருக்கின்றன. மிக அழகான மயிலும், கம்பீரமான துவஜஸ்தம்பமும் பார்வையை ஈர்க்கும் அழகுடையவை.

இவற்றுக்கும் அப்பால், ஆன்மிகச் செழிப்புக்கு உதவிய புராதனமான ஆலயங்களும் இந்த வளாகத்தில் உள்ளன என்கிற உண்மை, பலருக்குத் தெரிந்திருக்காது.

மூல விக்கிரகம், ஒரே பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக, வள்ளி தெய்வயானையோடு கூடிய முருகன் அருள் பாலிக்கிறார். முருகன் உருவத்தில் இரண்டு முக்கியமான வித்தியாசங்கள். முருகப் பெருமான் தலை யலங்காரம் - இறகுகளை வேடுவர் பாணியில் செருகியுள்ள அழகு. பாதங்கள் முன்வைத்து நடக்கும் பாவனையில் அமைந்துள்ள தோற்றம். இந்த நுட்பங்களை வெள்ளிக் கவசம் போர்த்தியிருந்தால் அவ்வளவு ரசிக்க



...வெளித்தோற்றம்...



* கொடிமரமும் வேல்களின் வரிசையும்...



* மீனவர்கள் கண்டெடுத்த வில்லுடையான்....

முடியாது. கவசம் இடாத நாட்களில், அபிஷேக நேரங்களில்தான் காண முடியும்.

**ஆ**லயத்தின் வயதை முறைப்படி கணித்துச் சொல்ல முடியவில்லை. பிராகாரச் சுவர்களில் புடைப்புச் சிற்பங்களாய்ச் சில மீன் உருவங்கள், ரிஷி, சிவலிங்க வடிவம் என்றெல்லாம் காணப்படுகின்றன. இவற்றை வைத்துப் பாண்டியன் காலம், எண்ணூறு ஆண்டுகள் பழமை என்றெல்லாம் சொல்கிறார்கள். கல்வெட்டு ஆதாரங்கள் இல்லை.

கோவிலின் தனிச் சிறப்பு இங்கே உள்ள மிகவும் வேலைப்பாடமைந்த ஒரு தேர். பங்குனித் திருவிழாவின் போது இதில் வடம் பிடிக்க முடிந்தவர்கள் கொடுத்து வைத்தவர்கள். லட்சக்கணக்கில் மக்கள் கூடும் திருவிழா பங்குனி உத்திரம்தான்!

ஆயிரத்துக்கு மேற்பட்ட பாற்குடங்கள், காவடிகள் என்று சுற்று வட்டாரக் கிராமங்களில் அமைந்துள்ள கோவில்களிலிருந்து புறப்பட்டு இங்கு வந்து சேர்கிறார்கள். கூடியவரை பக்தர்கள் தம் கையாலேயே அபிஷேகம் செய்ய அனுமதிக்கப்படுகிறார்கள்! மதப் பாகுபாடு இல்லாமல், உயர் பதவி - கீழ் நிலை என்கிற சமுதாயப் பாகுபாடுகளுக்கும் அப்பாற்பட்டு இந்தப் பிரார்த்தனையில் ஈடுபடுகிறார்கள்.

பங்குனித் தேரில் வில்லுடையானையும், துணைவியரையும் ஏற்றி இறக்குகிற உரிமை மீனவ சமுதாயத்தினருக்கு என்று ஏற்பட்டுள்ளது. சில நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பறங்கிப் பேட்டைக் கடலில் மீன்பிடிக்க வலை வீசியபோது, இந்த உற்சவத் திருமேனிகள் கிடைக்க, அவற்றை இங்கு கொண்டு வந்து ஒப்படைத்தார்களாம். வில்லின் மேற்புறக் கொண்டைப் பகுதி மட்டும் பின்னமாகியுள்ளது. இருப்பினும் மிக அழகான சிற்ப வடிவம் இது.

**வீ**ரன், அய்யனார் ஆலயம் அருகில் உள்ளது. 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று பாடிய வள்ளலார் இந்த முருகனைத் தரிசிக்க வந்தவர், இந்த

கமலமனராஜன்

அய்யனார் ஆலயத்தில் நடைபெற்ற உயிர்ப் பலியைக் காண மனம் பொறாமல் திரும்பிப் போய்விட்டார் என்கிறார்கள்.

எனினும் வேடனாக வந்து அருள் பாலிக்கும் வில்பிடித்த வேலவனுக்குத் தேர் செய்து தந்தவர்கள் என்னவோ அய்யனார் அடியார்கள்தாம்! கிடாவெட்டில் கிடைத்த தோல்களை விற்றுச் சேர்த்த பணத்தைக் கொண்டுதான் தேர் செய்யப்பட்டதாம். 'தெருவடைத்தான்' என்ற இந்தத் தேரின் பெயரே பெருமை சொல்லும்!

தல விருட்சம் வன்னிமரம். பழனியில் பங்குனி உத்திரத்தன்று நண்பகலை ஒட்டி ஒரு முகூர்த்த காலம் (12 முதல் 1.30 வரை) முருகன் பக்தர்களுக்குக் காட்சி தருவதில்லை. அதேநேரத்தில் பழனியாண்டவர் இந்த வில்லுடையான் பட்டிக்கு வந்து அருள்பாலிப்பதாய் நம்புகிறார்கள்.

சுற்று வட்டாரத்தில் நூற்றைம்பது கிராமங்களுக்குமேல் நம்பிக்கைக்குரிய சக்திவாய்ந்த தெய்வம் இந்த முருகப் பெருமான். குடும்பம் குடும்பமாய் வண்டி கட்டிக் கொண்டு வந்து பொங்கலிட்டு அன்னதானம் செய்வார்கள், பங்குனி உத்திரத்தன்று. ''பிரசாதம்'' என்கிற புனிதமான உணர்வோடு அன்னதானம் பெற்றுக் கொள்வார்கள். வழங்குகிறவர், பெறுகிறவர் இருசாராரும் பெருமைப்படுகிற நிகழ்ச்சி அது.

தண்ணீருக்குப் பஞ்சமில்லாத ஊர் நெய்வேலி என்பதால் தெப்பக்குளம், நந்தவனத் தோட்டம் போன்றவற்றை அமைத்துச் சுற்றுலாத் தலமாக ஆக்கத் திட்டங்கள் உள்ளன என்கிறார், நெய்வேலி வளாகத்தின் சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு அதிகாரியாகவும், இந்த ஆலயத்தின் நிர்வாக அறங்காவலராகவும் உள்ள திரு டி. சண்முகம்.

வாய்ப்புக் கிடைத்தால் வாழ்வில் ஒரு முறையேனும் சென்று காண வேண்டிய அபூர்வத் திருத்தலம் இது!

படங்கள் : பாலன் பூங்குழலி



கதையாகப்பட்டது: தீவிரவாதிகளால் ஒரு இளம்பெண்ணுக்கு நேருகிற கொடுமைகளும் அவளது பழி வாங்கலும். இந்த ரீதியில் இது எத்தனாவது கதை என்று சரியாக எழுதி அனுப்புபவருக்குக் குலுக்கல் முறையில் ஒரு கைகுலுக்கல்.

ஐ.ஏ.எஸ். சித்திரலேகா மேல் ஆஸிட் வீச்சு, அவள் புருஷன் மேல் பழிவீச்சு, பெண் மேல் உயிர் வீச்சு என்று மகா மாறுதல். வன்முறைக்கும் வக்கிரத்துக்கும் சரியான போட்டி. மகாபாரத துரியோதனனுக்கு இந்தப் படத்தில் துச்சாதன உத்தியோகம். நீளநீள ஷாட்டுகளில் அருவருப்பின் அரசோச்சல்.

சில வாரங்களுக்கு முன் ஏதோ ஒரு விமர்சனத்தில், செல்வாருக்கு சீர்திருத்த உத்வேகம் வந்து விட்டது என எழுதியிருந்ததாக ஞாபகம். அதை இப்போது வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். தப்பித் தவறியும் உங்கள் குழந்தைகளைக் கூட்டிப்போக வேண்டாம்.

ரோஜாவுக்குப் படத்தில் பாரதி என்று பெயர். புரட்சிப் பெண்ணாம். என்ன புரட்சி செய்கிறார்? பார்க்கலாம். கமலோடு அவ்வப்போது புகை மண்டலத்தில் கனவு காணுகிறார். (கடவுளே! இளையராஜாதானா? இத்தனை மோசமான டப்பாங்குத்துக்களை இதுவரை கேட்டதில்லை.) போலீஸ் ஸ்டேஷனில், கைதிகளோடு சீட்டாடுகிறார். அவ்வப்போது காலேஜ் வாசல்களில் கையில் புத்தகக் கட்டோடு அரைகுறை ஆடையுடன் தரிசனம் தருகிறார். போதாக்குறைக்கு ஒரு கொலை வேறு செய்து (ஆஹா, புரட்சி!) சிறைக்குப் போய், அங்கு கொஞ்சம் ஆட்டம் போட்டு, ஆயுள் தண்டனைக் கைதிகளுடன் தப்பி...

விஜயசாந்தி மாதிரி சண்டைபோட வேறு ஆசை. பொம்மலாட்டம் மாதிரி வெகு தமாஷ்.

யாரையாவது பாராட்டலாமென்றால் காமெராக்காரர் மட்டுமே 'உள்ளேன் ஐயா' என்கிறார். ஆங்கிள்களும் லைட்டிங்கும் ஹாலிவுட் ரகம்.

மற்றபடி, தேடிப்பிடித்தாலும் ஒரு நல்ல அம்சம்...?

ஸாரி...வெரி ஸாரி.

- ஆர்.பி.ஆர்.

கிளை மேலாளர் தர்ம சங்கடமாய் அவர்களைப் பார்த்தார்.

"அந்த பஸ்ஸுக்கு அப்புறம் ஒரு மணி நேரத் துக்கு பஸ்ஸே கிடை யாது ஸார்.. ஸ்கூல் போற புள்ளைங்க... வேலைக்குப் போறவங்க எல்லாரும் அதுலதான்



போயாகணும்.. பஸ்ஸுல கூட்டமிருந்து நிப்பாட்டாமப் போனாக்கூட பரவாயில்லை.. சமயத்துல யாருமே இல்லாம காலியாப் போவுது.. உங்க கிட்ட சொல்றது இது நாலாவது தடவ... இதுக்கும் நீங்க தகுந்த நடவடிக்கை எடுக்கலேன்னா...எங்க ஊர் ஜனங்க உங்க ஆபீஸ் முன்னாடி உண்ணாவிரதம் இருக்கிறது தவிர வேற வழி இல்ல ஸார்..''

# நிறுத்தம்

திருவாரூர் பாப

அந்த வார்த்தையைக் கேட்டதும் கிளை மேலாளருக்கு ரத்த அழுத்தம் ஏறி உடலெங்கும் வியர்வை படர்ந்தது மாதிரி பட்டது.

''சரி போங்க..இனிமே அப்படி நடக்காது.. ஒன்பது மணி டிரிப் கண்டிப்பா உங்க ஸ்டாப்பிங்குல நிக்கும்...'' என்றதும் அவர்கள் கோபமாய், வேகமாய் நகர்ந்தார்கள்.

இது நான்காவது தடவை. பல தடவை பெட்டிஷன்களை அனுப்ப வேண்டியவர்களுக்கு அனுப்பிவிட்டு, வேறு வழியில்லாமல் நேரே வந்திருக்கிறார்கள்.

ஒவ்வொருமுறை பெட்டிஷன் பார்த்தபோதும் சுப்பையனைக் கூப்பிட்டு எச்சரித்து அனுப்பியிருக்கிறார். அது என்ன திமிர் என்று தெரியவில்லை. எந்த ரூட்டில் போனாலும் புகார். ஸ்டாப்பிங்கில் நிறுத்துவதில்லை. பத்து பேரை மட்டும் வைத்துக் கொண்டு டிரிப் போகிறார். டிரைவர் மீது அளவு கடந்த ஆத்திரம் ஏற்பட்டது அவருக்கு.

யூனியன் லீடர். அந்த அகங்காரம். என்ன செய்து விட முடியும் என்கிற திமிர். ஏதாவது செய்தால் உடன் போராட்டம் என்பார்கள். காரணத்தை யோசிக்க மாட்டார்கள்.

ஜனங்கள் கஷ்டப்படுவது ஒரு பக்கம் இருக்கட்டும். அரசாங்கத்திற்கு எத்தனை இழப்பு? டீசல் விற்கும் விலையில்.. வேண்டுமென்றே காத்திருக்கும் பயணிகளை ஏற்றாமல் செல்வது தவறல்லவா...?

மணியடித்தார். எட்டிப் பார்த்த அட்டெண்டரிடம் ''உடனே டிப்போவுக்குப் போயி.. யூனியன் ஆபீஸ்ல டிரைவர் சுப்பையன் இருந்தா அழைச்சிக்கிட்டு வா...'' என்றார். அவன் வெளியே போனதும் டைப்பிஸ்டைக் கூப்பிட்டு வேகமாக டிக்டேட் செய்தார். அது சுப்பையனுக்கான சஸ்பென்ஷன் ஆர்டர்.

சுப்பையனுக்கு அது ஒரு மாதிரியான திருப்தி. ஸ்டாப்பிங்கில் கூட்டமாய் மக்கள் பேருந்துக்காக காத்துக் கொண்டு நிற்க, பேருந்தை மெதுவாக்கி நிறுத்துகிறமாதிரி சென்று... அவர்கள் ஆர்வமாய் பேருந்தை நோக்கி வரும்போது விருட்டென்று வேகம் கூட்டி இழுப்பது சந்தோஷமாய் இருக்கும்.

சிலர் பஸ்ஸை விரட்டிக் கொண்டே வருவதைக் கண்ணாடி வழியாய் ஆனந்தமாய்ப் பார்ப்பார்.

நிறுத்துகிறாற்போல் வேகம் குறைத்ததும் தூரத்தில் சாலையோரமாக நிற்கும் கூட்டம் மெல்ல நகர்வதும்... பஸ் நிறுத்தத்தின் உள்ளே உட்கார்ந்திருப்பவர்கள் அவசரமாய் எழுந்து வெளியே வந்து பேருந்தில் ஏற முயலும்போது விருட்டென்று பேருந்தை நகர்த்துவார்.

வேண்டுமென்றே ஸ்டாப்பிங் தாண்டி தூர நிறுத்துவார். இறங்க வேண்டியவர்கள் அவசரமாய் இறங்கியதும், ஏற நினைத்து ஓடி வருபவர்கள் ஏறுவதற்குள் பேருந்தை இழுப்பார்.

இவரின் இந்தப் போக்கு பிடிக்காமல் சண்டை வளர்க்கும் கண்டக்டர்கள் அதிகம். சிலர் பாதி வழியிலேயே

இறங்கி எதிரே வரும் பேருந்தில் ஏறிச் சென்றிருக்கிறார்கள். சில கண்டக்டர்கள் பயந்து கொண்டு அமைதியாய் இருப்பார்கள்.

பேருந்தில் பத்து பேர்கள்தான் இருப்பார்கள். பேய் வேகத்தில் எங்கும் நிற்காமல் நாகப்பட்டினம் நோக்கிச் செல்லும்.

பேட்டா இழப்பது ஒருபக்கம். அரசாங்கத்திற்கு நஷ்டம். காத்திருக்கும் மக்களை ஏற்றாமல் செல்வது தவறு என்பதெல்லாம் கப்பையனுக்குப் புரியவில்லை.

நான் ஏன் இவ்வாறு நடந்து கொள்கிறோம் என்பதையும் அவர் யோசித்துப் பார்த்ததில்லை. அடியக்கமங்கலத்தைப் பொறுத்தவரை 9 மணி டிரிப் என்பது முக்கியமான டிரிப். அந்த டிரிப்பை விட்டால் ஒரு மணி நேரம் காத்திருக்கவேண்டும் அல்லது ஆறு கிலோ மீட்டர் நடந்து அத்திப் புலியூரில் பஸ் ஏற வேண்டும். இதெல்லாம் கப்பையனுக்குப் புரியவில்லை.

''கப்பையன் வண்டியைப் பாரு.... ஜெட் மாதிரி போகுது... இருபத்தஞ்சி கிலோ மீட்டர் முப்பத்தைஞ்சி நிமிஷத்துல கடக்கிற ஒரே ஆளு நம்ம தலைவர்தான்யா...'' யாராவது சொல்லும்போது பெருமையாய் இருக்கும். அந்தப் பெருமையே அகங்காரமாய் மாறி அடுத்த நாள் வண்டி ஒரு ஸ்டாப்பிலும் நிற்காது. முப்பது நிமிடத்தில் அடையும் நோக்கோடு பத்து பயணிகளோடு பயணம் செல்லும்.

யூனியன் லீடர். மேலே கையை வைத்தால் பிரச்னை. எந்தப் பேருந்தும் நிறுத்தாமல் போகலாம். அதனாலேயே கப்பையனின் இந்த திமிர்த்தனத்தை வேறுவழி இல்லாமல் கிராம மக்கள் பொறுத்துக் கொண்டார்கள்.

சஸ்பெண்ட் செய்தது கப்பையனுக்கு ஒரு விதத்தில் நல்லதாகவே போயிற்று.

மகள் செல்வத்திக்கு ஏற்றமாதிரி பையன் ஒருவன் கோடூரில் இருப்பதாக அக்கா சென்ற முறை ஊருக்கு வந்தபோது சொல்லிக் கொண்டிருந்தது. ''இப்ப கம்மா தான இருக்கீங்க... போய்ப் பார்த்துட்டுத்தான் வாங்களேன். . அவளுக்கும் பதினாறு முடிஞ்சிட்டுதில்ல..சட்டுபுட்டுன்னு ஏதாச்சும் பண்ண வேண்டாமா...''

மனைவி சொல்ல, கப்பையன் புறப்பட்டார்.

கப்பையனுக்குப் பையனைப் பிடித்திருந்தது. சின்னப் பையனாக இருந்தான். இருபத்தி நான்கு வயது. சொந்தமாக சைக்கிள் கம்பெனியும் அது சம்பந்தமான பொருட்கள் விற்கும் கடையும் இருந்தது.

ஒரே பையன். இரண்டு ஏக்கர் நிலமும் சொந்த வீடும் இருந்தது.

''அப்ப ஜாதகம் மாத்திக்கலாமா..?'' பையனின் அப்பா கேட்டார்.

''மாத்திக்கலாமே... ''கப்பையன் தயாராக வைத்திருந்த ஜாதகத்தின் நகலை எடுத்துக் கொடுத்தார். கிளம்பினார்.

''பையன் கடையை விட்டு வர முடியாது..ரெண்டு கிலோ மீட்டர் போகணும்... நான் வேணா வரட்டுமா...?''

''அதெல்லாம் வேணாம்.... நீங்க வேற ஏன் நடந்துக்கிட்டு...நான் மெல்லப் போயிடறேன்..''

கப்பையன் கும்பிட்டுவிட்டு நடந்தார்.

மனசுக்குள் ஆச்சரியமாய் இருந்தது. கிட்டத்தட்ட இந்த இடம் எல்லா விதத்திலும் செல்வத்திக்குப் பொருந்தி வருகிறாற்போல்பட்டது. ஜாதகம் பொருந்தினால் உடன் நிச்சயம். தை மாதத்தில் கல்யாணம். உடன் சம்மந்தி. அடுத்த வருடம் தாத்தா.

அப்படி என்ன வயதாகி விட்டது தனக்கு என்று யோசித்தார், கப்பையன். நாற்பத்திரண்டுதானே...? கப்பையனுக்கு அந்த நிமிடம் இன்னொரு கவலையும் கூடவே வந்தது. கல்யாணச் செலவுக்குப் பணம் வேண்டுமே... மீனாட்சியிடம் நகை இருந்தாலும் கல்யாணம் நான்தான் பண்ண வேண்டும். என்னதான் சிக்கனமாகப் பண்ணினாலும் இருபதாயிரமாவது வேண்டும்.

என்ன சேமித்து வைத்திருக் கிறேன்? ஒன்றும் இல்லை. காசு கிடக்கட்டும். இன்றைய நிலையில் வேலையில் கூட இல்லை.

கப்பையனுக்கு முதன்முதலாய்த் தன் மீதே வெறுப்பு வந்தது. டிப்போவிலேயே குறைச்சலாய் கலெக்ஷன்

பேட்டா வாங்குகிற ஆள் அவராகத் தான் இருப்பார். ஒரு நாளைக்கு பத்து அல்லது பனிரெண்டு கிடைக்கும். அதை அவர் பெரிதாய் நினைக்க வில்லை. நினைத்திருந்தால் எல்லா நிறுத்தங்களிலும் பேருந்து நின்றிருக் கும். பிரச்னை இல்லை. இப்போது இந்த சஸ்பென்ஷனும் இல்லை.

முத்துசாமி, பேட்டா வாங்கிய காசிலேயே நிலம் வாங்கி விட்டதாகச் சொன்னான். கோவிந்தன் டி.வி.எஸ்.50 வாங்கி இருப்பதாகச் சொன்னான்.

நடந்து வந்தது கால்களை வலிக்க, போடப்பட்டிருந்த கிற்றுக் கொட்டகை யில் அமர்ந்திருக்கையில் கப்பையன் அந்தத் தீர்மானத்திற்கு வந்தார். நாளை, முதல் வேலையாக கிளை மேலாள ரைச் சந்தித்து சஸ்பென்ஷனைத் திரும்ப வாங்க முடியுமா என்று கேட்க வேண்டும். இல்லாவிட்டால் மன் னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்து... நாளையிலிருந்து டியூட்டியில் சேர வேண்டும். முடிந்தால் கும்பகோணம் ரூட் கேட்டு வாங்கிக் கொள்ள வேண் டும். அதில்தான் ஸ்டேஜ் அதிகம். எல்லா ஸ்டாப்பிங்கிலும் பேருந்தை நிறுத்த வேண்டும்.

கப்பையன் மணி பார்த்தார்.

பஸ் வருகிற நேரம்தான். காத்திருந் தார். இருட்டுவதற்குள் வீடுபோய்ச் சேர வேண்டும். முக்கியமா, பனி பொழிய தொடங்குவதற்குள். பனி யில் நனைந்தால் இரவு மூச்சுத் திணறல் வருகிறது.

தூரத்தில் சத்தமும் பிறகு பேருந்தின் முகப்பும் தெரிய, கிற்றுக் கொட்டகை யை விட்டு வெளியே வந்தார். அவரைத் தவிர்த்து யாரும் இல்லை.

கையை ஆட்டினார்.

தூரத்திலேயே பேருந்து வேகம் குறைந்தது தெரிந்தது. மெதுவாக வந்த பேருந்து- கப்பையன் நகர்ந்து சென்று ஏறுவதற்குத் தயாராய் நிற்க, பஸ் நிறுத்தம் அருகே வந்ததும் பட் என்று கியர் மாற்றி விருட் என்று வேகம் எடுத்துச் சென்றது.

கப்பையன் ஸ்தம்பித்து நின்றார்.

அடுத்தப் பேருந்துக்கு இன்னும் இரண்டு மணி நேரம் காத்திருக்க வேண்டும். அல்லது எட்டு கிலோ மீட்டர் நடந்து சென்று சிக்க லைத்தில் பேருந்து ஏற வேண் டும்.

# கணவன் சிகரெட் பிடித்தால் மனைவிக்கு

# கான்ஸர்!

புற்றுநோய், ஆண்களின் நுரையீரல்களையும் பெண்களின் மார்பகங்களையும் தான் அதிகமாகக் குறி வைக்கிறது. மேற்கத்திய நாடுகளில் பதினாறுக்கு ஒரு பெண் மார்பகப் புற்று நோயால் பாதிக்கப்படுவதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. ஆனால் இந்தியாவில் பாதிக்கப்படுபவர்கள் எண்ணிக்கை இத்தனை அதிர்ச்சி தருவதாக இல்லாவிட்டாலும், ஏறுமுகத்தில் இருக்கலாம் என்பதற்கான அறிகுறிகள் தெரிகின்றன. கொழுப்புச்சத்து அதிகமாக உட்கொள்ளும் உணவுப் பழக்கமுடைய உயர்தட்டுப் பெண்களே மார்பகப்புற்று நோய்க்கு அதிகம் பலியாகிறார்கள்.

''நடுத்தர வர்க்கத்தினரிடையேயும் உணவு வழக்கங்கள் மாறி வருவதால் அவர்களும் இந்தப் பட்டியலில் இடம் பிடிக்க அதிக நாளாகாது'' என்கிறார் டாக்டர் உமா கிருஷ்ணசாமி. இவர் அப்போலோ கான்சர் சென்டரைச் சேர்ந்தவர். மார்பகப் புற்று நோயைக் கட்டுப்படுத்தும் சமீபத்திய வழிமுறைகள் பற்றிய கருத்தரங்கில் டாக்டர் உமா தவிர, நெதர்லந்தைச் சேர்ந்த டாக்டர் பாடர்மேனும் பேசினார்.

''இந்தப் புற்று நோய்க்கு இன்னொரு



முக்கிய காரணம் - சிகரெட்'' என்கிறார் டாக்டர் பாடர்மேன்.

மேலை நாட்டவர்களைப் போல் நம் பெண்மணிகள் சிகரெட் பிடிப்பதில்லை. எனினும், ''பாஸிவ் ஸ்மோக்கிங்''கினால் -அதாவது உடன் வாழும் ஆண்கள் வெளிவிடும் சிகரெட் புகை உள்ளேறித் தாக்கும் பரிதாபத்தினால்-இவர்கள் பாதிக்கப்படுகிறார்கள்.

தாயைத் தாக்கிய மார்பகப் புற்றுநோய், மகளைத் தாக்குவதற்கும் வாய்ப்பு இருக்கிறது.

மார்பகப் புற்று நோயைப் பற்றிய பல கேள்விகளுக்கு இன்னும் விஞ்ஞான பூர்வமான பதில் கிடைத்தபாடில்லை. கருத்தடை மாத்திரைகள் இந்த நோய்க்குக் காரணமா? குழந்தைகளுக்குப் பாலூட்டும் பழக்கத்தால் இது மட்டுப்படுமா? மற்ற நாடுகளுடன் ஒப்பு நோக்க, இந்தியாவிலும் ஜப்பானிலும் இப்புற்றுநோய் குறைவாக இருப்பதற்கு இந்தப் பாரம்பரியப் பழக்கம் காரணமா? திருமணமாகாத முதிர் கன்னிகளையும், குழந்தை இல்லாத பெண்களையும் அதிகம் தாக்குகிறதா? தீங்கு அதிகம் செய்யாத சில வேறு மார்பக நோய்களால் பாதிக்கப்பட்டால் (benign breast disease), புற்றுநோய் தாக்கும் வாய்ப்பு குறையுமா?- இது போன்ற பல கேள்விகளுக்கு விடை இன்னும் சந்தேக மூட்டத்தில்.

நோய் முற்றுவதற்குள் முன்னெச்சரிக்கையுடன் கண்டுபிடிக்க ஏதுவான மருத்துவச் சோதனைகள் இருக்கின்றன என்பது தான் ஆறுதலான விஷயம். முதல் வழி- எளிதான சுயபரிசோதனை. வீட்டுவிலக்கானபின் ஒருவாரம் கழித்தோ, மாதாமாதம் முதல் தேதியோ செய்து கொள்ளலாம். மார்பகத்தோற்றத்தில் ஏதாவது மாறுதல் தெரிகிறதா என்று கைகளைப் பக்கவாட்டில் தொங்கவிட்டு, உயரத்தூக்கியும் கண்ணாடியில் பார்த்துத் தெரிந்து கொள்ளவும். படுத்த நிலையில் உள்ளங்கைகளால் அக்குளையும் மார்பகத்தையும் சோதனை செய்யவும். சிறு கட்டிகள் போன்று கைக்கு அகப்பட்டால் உடனே மருத்துவரை அணுகவும். இதுதவிர இரண்டு, மூன்று வருடங்களுக்கொரு முறை பாப் ஸ்மியர், மேமோகிராம் போன்ற மருத்துவச் சோதனைகளால் மார்பகப்புற்றுநோயினை முதல் கட்டத்திலேயே 90% கண்டுபிடித்து விடலாம். மார்பில் தோன்றும் கட்டிகளுள் 90 சதவிகிதம் உயிருக்கு ஆபத்து விளைவிக்காத வகையைச் சேர்ந்தவை என்பது மேலும் ஒரு ஆறுதல்.

- நிர்மலா சக்ரவர்த்தி

# தியாக பூமி

## அமரர் கல்கி

ராதா-கிருஷ்ண நடனம் ஆனதும் சபையில் பிரமாதமான கரகோஷமும் ஆரவாரமும் உண்டாயின. இவற்றுக்கிடையே சபையிலிருந்த பிரமுகர்களில் ஒருவரான திவான் பகதூர் பஞ்சாபகேச சாஸ்திரிகள் மேடை மீதேறினார். நாடகம், நாட்டியம் என்னும் கலைகளைப் பற்றி அவர் விஸ்தாரமாகப் பேசினார். நடராஜாவின் ஆனந்தக் கூத்தில் ஆரம்பித்து, அன்று சாரு ஆடிய ஆட்டத்தில் கொண்டு வந்து முடித்தார். அவருடைய பேச்சு நீண்டு கொண்டே இருந்ததைப் பொறுக்காமல், சபையில் சிலர் அவ்வப்போது கைதட்டினார்கள். கடைசியில் அவர், "இன்று சாரு என்கிற குழந்தை நாட்டியம் ஆடினதைப் பார்த்தபோது எனக்குக்கூட நாட்டியம் கற்றுக் கொள்ளலாமென்று ஆசை உண்டாகிவிட்டது" என்றதும், சபையில் கொல்லென்ற சிரிப்பு எழுந்தது. இப்படிச் சொல்லிவிட்டு, திவான் பகதூர் பஞ்சாபகேச சாஸ்திரிகள் மேடையிலிருந்து கீழே இறங்கினார். இறங்கும்போது, கால் நொடித்துத் தடுமாறி விழுந்தார். அப்போது சபையில் உண்டான கோலாகலத்தின் சப்தம் வானத்தை அளாவிற்று.

பிறகு, கஜகுல ஆஜாநுபாகு அவர்கள் கையில் ஒரு பெரிய ரோஜாப்பூ மாலையுடன் மேடையின் மீது ஏறினார். சபையில் அதிருப்தியின் சின்னங்கள் அதிகமாயின. ஆனால் ஆஜானுபாகு வாயைத் திறந்து பேச ஆரம்பித்ததும், அதிருப்தி மாறி மௌனம் குடி கொண்டது.

"சபையோர்களே, என் சிநேகிதர் மகா-ராஜ-ராஜ-ஸ்ரீ பஞ்சாமிர்த இல்லை, மன்னிக்கணும் - பஞ்சாபிகேச சாஸ்திரிகளைப் போல் நான் பெரிய பிரசங்கம் செய்யவரவில்லை. (சிரிப்பு) ரொம்பவும் சந்தோஷமான ஒரு கடமையைச் செய்வதற்காக உங்கள் முன்னால் வந்து நிற்கிறேன். இன்று ஒரு சுபதினம். ஸ்ரீமதி உமாராணி தேவி அவர்கள் இவ்விடம் இன்று விஜயம் செய்திருப்பது நமது பள்ளிக்கூடத்தின் பாக்கியம். (கரகோஷம்) நமது பள்ளிக்கூடத்தின் கட்டட நிதியைப்பற்றி இனிமேல் நமக்குக் கவலையில்லை. (கரகோஷம்) ஸ்ரீமதி உமாராணி தேவி மனசு வைத்தால் நமது பள்ளிக்கூடம் அடுத்த வருஷமே ஹைஸ்கூலாகவும் காலேஜாகவுங்கூட மாறிவிடும். உங்கள் சார்பாகவும் எங்கள் பள்ளிக்கூடத்தின் சார்பாகவும் இந்த ஹாரத்தை ஸ்ரீமதி உமாராணி தேவிக்குப் போடுகிறேன்." (பலமான கரகோஷம்)

இம்மாதிரி சொல்லிவிட்டு, ஆஜானுபாகு, பக்கப் படுதாவின் பக்கம் பார்த்து ஏதோ சமிக்ஞை செய்தார். குழந்தை சாரு அங்கிருந்து வந்தாள். அவளிடம் ஆஜானுபாகு பூமாலையைக் கொடுத்தார். சாரு அந்த மாலையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு மேடையிலிருந்து கீழே இறங்க யத்தனித்தாள்.

அப்போது, உமாராணி சட்டென்று தன்னுடைய ஆஸனத்திலிருந்து எழுந்து விரைந்து சென்று மேடை மீது ஏறினாள். சபையில் மறுபடியும் கரகோஷம் உண்டாயிற்று. குழந்தை சாருவினிடமிருந்த பூமாலையை உமா, சாருவின் கழுத்தில் போட்டு, அவளுடைய கன்னத்தில் ஒரு முத்தமிட்டுவிட்டுக் கீழே இறங்கினாள். அப்போது சபையில் எழுந்த சந்தோஷ ஆரவாரம் மண்டபத்தின் கூரையைப் பிளந்து கொண்டு மேலே சென்று வானை அளாவிற்று என்று சொன்னால் அது மிகையாகாது.

கடைசி அம்சமும் முடிந்ததும், உமாராணி வெளியே சென்று வண்டியில் ஏறிக் கொண்டாள். காரின் அருகில் விடை பெற்றுக் கொள்ள நின்ற வக்கீலிடம், "வக்கீல் ஸார்! அந்தக் குழந்தை யார் வீட்டுக் குழந்தை என்று கொஞ்சம் விசாரிச்சுண்டு வந்து சொல்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"ஆகட்டும், அம்மா!" என்றார் வக்கீல்.

"மறந்துவிடக் கூடாது. கட்டாயம் விசாரிச்சுண்டு வாங்கோ!" என்றாள்.

'இது என்ன பைத்தியம்' என்று வக்கீல் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார்.

## 42. பராசக்தி குழந்தை

அன்றிரவு உமா குழந்தையின் நினைவாகவே இருந்தாள். தூக்கத்தில் சாருவைப் பற்றித்தான் கனவு. மறுநாள் பொழுது விடிந்த பிறகும் அந்த ஞாபகம் மாறவில்லை. இப்படிப்பட்ட குழந்தையைப் பெற்ற பாக்கியசாலிகள் யாரோ என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். 'வக்கீலை விசாரிக்கச் சொன்னோமே, அவர் விசாரித்தாரோ என்னமோ தெரியவில்லையே?' என்று யோசித்தாள். காலை ஒன்பது மணி வரையில் தகவல் ஒன்றும் வராமல் போகவே, டெலிபோனை எடுத்து வக்கீலைக் கூப்பிட்டாள்.

வக்கீல், ''யாரு? ஓஹோ! நீங்களா! நமஸ்காரம்'' என்றார்.

''நேற்று ராத்திரி டான்ஸ் பண்ணின குழந்தையைப் பற்றி விசாரிக்கச் சொன்னேனே, விசாரிச்சீர்களா?'' என்று உமா கேட்டாள்.

''நீங்கள் ஒரு காரியம் சொன்னால் அதை நான் செய்யாமல் இருப்பேனா?'' என்றார் வக்கீல்.

''அப்படின்னா ஏன் உடனே தெரிவிக்கலை?'' என்றாள் உமா.

''இல்லை, வந்து, விஷயம் அவ்வளவு அவசரமாகத் தோணலை. அதனாலேதான் மத்தியானம் வந்து நேரில் தெரியப்படுத்



தலாம் என்றிருந்தேன்.''

''போகட்டும்; இப்பத்தான் சொல்லுங்கள்.''

வக்கீல் தொண்டையைக் கனைக்கும் சத்தம் கேட்டது.

''என்ன ஸார்! ஆர்ப்பாட்டம் பலமாயிருக்கே. இதுவும் கேஸ் விசாரணையா என்ன? நிஜத்தைச் சொல்றதுக்கு இவ்வளவு யோசனை என்னத்திற்கு?''

''யோசனை ஒண்ணுமில்லை - வந்து - பழம் நழுவிப் பாலிலே விழுந்ததுன்னு கேட்டிருக்கிறீர்களோல்லியோ...?''

''அதுக்கென்ன இப்போ வந்தது?''

''அந்த மாதிரி - நேற்று ராத்திரி நீங்க போனவுடனே நியேட்டரிலேயே விசாரிச்சுட்டேன். விசாரிச்சதிலே, ஒரு கல்லிலே இரண்டு பழம் விழுந்தாப்பலே ஆச்சு.''

''விஷயத்தைச் சொல்லுங்கோ, ஸார்!''

''அதுதானே சொல்லிண்டிருக்கேன். நீங்க முன்னே சம்பு சாஸ்திரின்னு ஒருத்தரைப் பத்தி விசாரிக்கச் சொன்னீர்களோ, இல்லையோ?''

''ஆமாம்?'' என்று உமா சொன்னபோது, அவள் குரல் கொஞ்சம் நடுங்கிற்று.

''குழந்தையைப் பற்றி விசாரிச்சதிலே சம்பு சாஸ்திரியையும் கண்டு பிடிச்சுட்டேன். இந்தக் குழந்தை சாவடிக்குப்பத்திலே சம்பு சாஸ்திரிங்கறவர் வீட்டிலேதான் இருக்காளாம். அவர்தான் கார்டியனாம். வேறே தாயார் தகப்பனார் கிடையாதாம்.''

''என்ன, என்ன! வக்கீல் ஸார்! நிஜமாவா சொல்றேள்?''

''நிஜமாத்தான் சொல்றேன். அந்தச் சம்பு சாஸ்திரிங்கறவரைக் கூடப் பார்த்தேன். நல்ல ஒண்ணாம் நம்பர் மடிசஞ்சிப் பிராமணன்!''

உமா தன் வாய்க்குள், ''இடியட்!'' என்று அழுத்தந்திருத்தமாய்ச் சொல்லிக் கொண்டாள். அது அந்த மனுஷர் காதில் விழுந்ததோ என்னவோ தெரியாது. உடனே அவள் உரத்த குரலில், ''இந்தச் சமாசாரத்தை நேத்து ராத்திரிலேயிருந்து சொல்லாமலா வச்சிண்டிருந்தேள்? ரொம்ப பேஷ்! அவர் எங்கே இருக்கார்னு சொன்னேள்?'' என்று கேட்டாள்.

''சாவடிக் குப்பத்திலே....''

உமா, டக்கென்று டெலிபோன் ரிஸீவரை வைத்து விட்டு விரைவாகக் கீழே இறங்கினாள். ''டிரைவர்! டிரைவர்! வண்டியை எடு, ஜல்தி!'' என்றாள். வண்டி வந்ததும், ''சாவடிக் குப்பத்துக்குப் போ! சீக்கிரம்!'' என்றாள்.

டிரைவர் சிறிது தயங்கி, ''சாவடிக்குப்பம் எங்கேயிருக்குங்க?'' என்று கேட்டான்.

''சாவடிக்குப்பம் தெரியாதா உனக்கு? நீ என்ன டிரைவர்?'' என்றாள் உமா. தர்வானை அழைத்துக் கேட்டாள். அவனுக்கும் தெரியவில்லை.

''கத்த தடியன்கள்! ஏண்டா நிக்கறேள்? எங்கேயாவது போய் விசாரிக்கண்டு வாங்கோ, சீக்கிரம்!'' என்றாள்.

வேலைக்காரர்களுக்கெல்லாம் ஆச்சரியமாயிருந்தது. அம்மாளுக்கு இவ்வளவு கோபம் வந்து அவர்கள் பார்த்ததேயில்லை. சாவடிக் குப்பம் எங்கேயிருக்கிறதென்று விசாரிப்பதற்காக அவர்கள் நாற்புறமும் ஓடினார்கள்.

உமா காரிலிருந்து இறங்கி உள்ளே சென்று மறுபடியும் டெலிபோனில் வக்கீலைக் கூப்பிட்டு விசாரித்தாள்.

கடைசியாக, சாவடிக் குப்பம் எங்கே

## அருள்வாக்கு

இப்போது தேசம் இருக்கிற துர்த்தசையில், 'ஓரியண்டலிஸ்ட்' எனப்படுகிற வெள்ளைக்காரர்களும், அவர்களுடைய வழியைப் பின்பற்றுகிற நம்முடைய ஆராய்ச்சியாளர்களும் சொல்லுகிறதிலிருந்துதான் வேதங்களைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. வேதங்களைப் பற்றி ரொம்பவும் உபயோகமான பல ஆராய்ச்சிகளை வெள்ளைக்காரர்கள் பண்ணியிருப்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அவர்களுடைய தொண்டுக்கு நாம் நன்றி சொல்லத்தான் வேண்டும். மாக்ஸ்முல்லர் போலப் பலர் வாஸ்தவமாகவே வேதத்திலுள்ள கௌரவ புத்தியினாலேயே எத்தனையோ பரிச்ரமப்பட்டு தோண்டித் துருவிச் சேகரம் பண்ணி, ஆராய்ந்திருக்கிறார்கள். வால்யூம் வால்யூமாகப் புஸ்தகம் போட்டிருக்கிறார்கள். ஸர் வில்லியம் ஜோன்ஸ் என்று இருநூறு வருஷங்களுக்கு முந்திக் கல்கத்தா ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவர் ஆரம்பித்த ''ஏஷியாடிக் ஸொஸைடி'' போட்டிருக்கும் வைதிக புஸ்தகங்களைப் பார்த்தாலே பிரமிப்பாயிருக்கும். மாக்ஸ்முல்லர், ஈஸ்ட் இண்டியா கம்பெனி உதவியுடன் ஸாயன பாஷ்யத்தோடு ரிக் வேதத்தையும், இன்னும் பல ஒசித்து மத நூல்களையும் வரிசையாக அச்சிட்டிருக்கிறார். இப்படி இங்லீஷ்காரர்கள் மட்டுமின்றி, ஜெர்மனி-பிரான்ஸ்-ருஷ்யா தேசத்தவர்களும் நிரம்ப உழைத்து ஆராய்ச்சி பண்ணியுள்ளனர். ''கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்ததுதான் பெரிய டிஸ்கவரி'' என்று கூத்தாடிய வெள்ளைக்காரர் உண்டு. தேசம் முழுதும் சிதறிக் கிடந்த வேத வேதாந்தங்களைக் கண்டு பிடித்து, தர்ம-க்ருஹ்ய-ச்ரௌத ஸூத்ரங்களோடு மொழி பெயர்த்து 'பப்ளிஷ்' பண்ணியிருக்கிறார்கள். வைதிக சாஸ்தி



ரங்கள் மட்டுமின்றி, குண்டலினீ தந்திரம் பிரபலமானதே 'ஆர்தர் அவலான்' என்கிற ஸர் ஜான் உட்ராஃபின் புஸ்தகங்களால்தான். நம் கலாசாரத்தின் மற்ற அம்சங்களுக்கும் உதவிய வெள்ளையருண்டு. கர்ஸன் வைஸ்ராயாக இருந்த போது Protection of Ancient Monuments என்று சட்டம் கொண்டு வந்ததால்தான் நம்முடைய கோயில்கள் முதலியவற்றை யார் வேண்டுமானாலும் இடிக்கலாம் என்ற நிலை மாறிற்று. ஃபெர்கூஸன், தேசம் முழுதும் உள்ள நம் சிற்பச் செல்வங்களை ஃபோட்டோ எடுத்துப் பிரசாரம் பண்ணினான். கன்னிங்ஹாம், மார்ட்டிமர் வீலர், ஸர் ஜான் மார்ஷல் முதலானவர்கள் ஆர்க்கியாலஜியில் (புதைபொருள்) நிரம்பச் செய்திருக்கிறார்கள். மெக்கென்ஸி தேசம் முழுதும் ஏட்டுச் சுவடிகளை சேகரித்ததால்தான் நம் பழைய சாஸ்திரங்களில் பலவற்றை இன்று தெரிந்து கொள்ள முடிகிறது. எபிக்ராஃபிக்கென்றே (சாஸனங்களுக்கென்றே) இலாகா வைத்ததும் வெள்ளைக்கார ஆட்சியில்தான்.

இப்படியாக, நமக்கு எத்தனையோ கெடுதலை உண்டு பண்ணின வெள்ளைக்கார ஆட்சியிலும் சில நன்மைகள் விளைந்தன. ஆனாலும் இந்த நன்மைக்குள்ளேயே கூடச் சில கெடுதல்களும் உண்டாயின. ஏனென்றால் ஓரியண்டலிஸ்ட், இண்டாலஜிஸ்ட் என்கிறவர்களில் பலருடைய உத்தேசம், வேதத்திலிருந்து சரித்திரத்தை நிர்மாணிப்பது, அப்படிச் சொல்லிக் கொண்டு ஆரியர்-திராவிடர் என்று த்வேஷம் உண்டாக்குவது முதலானவைதான். அவர்கள் 'பகுத்தறிவுக் கொள்கை' என்பதன்படி அதீந்திரியமானதையெல்லாம் allegory (உருவகம்) என்று தப்பர்த்தம் செய் வார்கள். இவல்யூஷன் தியரி (பரிணாமக் கொள்கைப்) படி வேதரிஷிகள் நம்மை விடத் தாழ்ந்த Primitiveகள் என்றே வைத்து இவர்கள் வியாக்யானம் செய்வார்கள். கிறிஸ்துவ மதத்தைப் பரப்பும் உள்நோக்கத்திலேயே நம் மதநூல்களை ஆராய்ச்சி செய்து, நடுநிலைமை மாதிரி காட்டிக் கொண்டே நம்மை மட்டந் தட்டியவர்களும் உண்டு. தங்கள் பாஷைக்கும் ஸம்ஸ்க்ருதத்துக்கும் உள்ள ஒற்றுமையைப் பார்த்து Comparative Philology (மொழிஒப்பு இயல்)க்காகவே ஆராய்ச்சி பண்ணினவர் அநேகர்.

அவர்கள் செய்த ரிஸர்ச், பிரசாரம், உழைப்புக்கெல்லாம் நாம் ஸ்லாகிக்கலாம். ஆனால் வேதங்களின் முக்ய நோக்கம் (Purpose) லோக க்ஷேமார்த்தம் வேத சப்தத்தைப் பரப்பி அத்யயனம் பண்ணுவது, யக்ஞம் முதலான வைதிக கர்மாக்களைப் பண்ணுவது என்பனவே. இந்த இரண்டையும் தள்ளிவிட்டு, புத்திக்கு அதீதமான வேதத்தை புத்தியால் ஆராய்ந்து, ஜனங்களின் வாக்கிலும் காரியத்திலும் உயிரோடு வாழ வேண்டிய வேதத்தைப் பெரிய புஸ்தகங்களாக்கி லைப்ரரியில் வைப்பது, ஜூ (Zoo) வில் இருக்க வேண்டிய ஜீவ ஜந்துக்களைச் 'செத்த காலேஜி'ல் (மியூஸியத்தில்) வைக்கிறமாதிரிதான்!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

இருக்கிறதென்பது தெரிந்து, வண்டி கிளம்பியபோது எஜமானியின் அவசரத்தையும் பரபரப்பையும் பார்த்திருந்த டிரைவர், வண்டியை வெகு வேகமாக ஓட்டினான். சற்று நேரத்துக்கெல்லாம் அம்மாள், "ஏண்டா இவ்வளவு வேகமாய் ஓட்டுகிறாய்? மெதுவாய்ப் போ!" என்று சொன்னதும், அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

உண்மை என்னவென்றால், இதற்குள் உமாவின் பரபரப்பெல்லாம் அடங்கிவிட்டது. அப்பாவிடம் என்ன பேசுவது, எப்படி நடந்துகொள்வது என்ற யோசனை மேலிட்டது. தன்னைப் பார்த்ததும் தான் சாவித்திரி என்பதை அவர் தெரிந்து கொள்வாரா? தெரிந்து கொள்ளாவிடில் தான் சொல்ல வேண்டுமா? "அப்பா! என்னைத் தெரியவில்லையா?" என்று அவர் காலில் விழுந்து கதறலாமா? - சீச்சீ! கூடவே கூடாது. தான் பெற்ற பெண்ணை அவருக்குத் தெரியவில்லையென்றால் இன்னும் கொஞ்ச நாள் தெரியாமலே இருக்கட்டும்! ஆமாம்! அவருக்குத் தெரியாமல் இருப்பது தான் நல்லது. தெரிந்தால், தன்னை ஏற்றுக் கொள்வாரோ என்னவோ? அவர் கல்யாணம் பண்ணிக் கொடுத்த அழகான புருஷனிடம் ஏன் இருந்து வாழவில்லையென்று கோபித்துக் கொண்டாலும் கொள்வார். தம்

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

## FORM IV

1. Place of Publication : Madras
2. Periodicity of Publication : Weekly
3. Name of Printer : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras - 600 040
4. Name of Publisher : V. Vaidyanathan
   Nationality : Indian
   Address : 6-A, Warren Road, Mylapore, Madras - 600 004
5. Name of Editor : Seetha Ravi
   Nationality : Indian
   Address : 5, III Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Madras - 600 041
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1994

V. Vaidyanathan
Publisher

மகள் என்று சொல்லிக் கொள்ள வெட்கப்பட்டாலும் படுவார்! அவருக்கு ஏன் அவ்வளவு சங்கடத்தை உண்டாக்க வேண்டும்? அப்பாவாம் அப்பா! பெண்ணைச் சந்தியில் விட்ட அப்பா! அவரிடம் போய் நான் உங்கள் பெண் என்று சொல்லாமற் போனால்தான் என்ன?

ஆனால், குழந்தை! என் குழந்தை! -- அப்பா! உங்களை நான் நம்பியது வீண் போகவில்லை. இத்தனை நாளும் வளர்த்துக் காப்பாற்றினீர்களே? - சாரு! சாரு! நீ என் குழந்தையடி! அதனால்தாண்டி உன்னைப் பார்த்ததும் என் உடம்பு அப்படித் துடித்தது! இதெல்லாம் நிஜமா? நான் காண்பது கனவில்லையா? உண்மையில் சாருவா என் குழந்தை?

இந்த மாதிரியெல்லாம் உமாவின் உள்ளத்தில் ஆயிரம் எண்ணங்கள் அலை மோதிக் கொண்டு எழுந்தன. அப்பாவிடம் உண்மையைச் சொல்வதா, வேண்டாமா என்ற யோசனை முடிவு பெறுவதற்குள் வண்டி சாவடிக்குப்பத்தில் வந்து நின்றது.

**எ**ன்றும் இல்லாத அதிசயமாகக் குப்பத்தில் மோட்டார் வண்டி வந்து நிற்கவே, குழந்தைகளும் பெரியவர்களுமாய் வண்டியை வந்து சூழ்ந்து கொண்டார்கள். "சம்பு சாஸ்திரிகள் வீடு எது?" என்று உமா கேட்டுக் கொண்டிருக்கையிலேயே ஒரு குடிசைக்குள்ளிருந்து சாரு வெளியில் வருவதைப் பார்த்துவிட்டாள். உடனே வண்டியிலிருந்து இறங்கி விரைந்து சென்றாள். குழந்தையை வாரி எடுத்துக் கொண்டு கரைகாணாக் காதலுடன் அணைத்து முத்தமிட்டாள்.

சாரு, "மாமி! நான் உங்களைப் பத்தியேதான் நினைச்சண்டிருந்தேன். நேத்திக்கு எனக்கு ரோஜாப் பூ மாலை போட்டேளோன்னோ? அதை ஜோராய்ப் போட்டுண்டு வந்து தாத்தாகிட்டக் காட்டினேன். தாத்தா ரொம்ப சந்தோஷப்பட்டார். அதை இன்னுங்கூட உள்ளே வச்சிருக்கேன்" என்று மூச்சு விடாமல் பேசினாள். பிறகு, உமாராணியின் பிடியிலிருந்து திமிறிக் கொண்டு கீழே இறங்கி அவள் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு, "தாத்தா! தாத்தா! இருபது டிக்கெட் வாங்கிண்டான்னு சொன்னேளே, அந்த மாமி வந்திருக்கா!" என்று கூவிக் கொண்டே உள்ளே போனாள்.

ஏதோ புத்தகத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சம்பு சாஸ்திரிகள் உமாவைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்திருந்தார். அப்போது உமாவுக்கு நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது. அவர் தெரிந்து கொண்டு விட்டாரோ? நாம் இப்போது சாருவைக் கட்டிக் கொண்டதுபோல் அவரும் ஓடிவந்து, "குழந்தை!" என்று நம்மைக் கட்டிக் கொள்வாரோ? உமாவுக்கு கண்ணில் ஜலம் ததும்பப் பார்த்தது. அப்போது சாஸ்திரிகள், "வாருங்கோ, அம்மா! உட்காருங்கோ! உங்களைப் போலப் பெரிய மனுஷாளை உபசாரம் பண்றதுக்குக்கூட எனக்குத் தெரியாது!" என்றார்.

உமாவுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. இவர் நம்மைத் தெரிந்து கொள்ள வில்லை. ரொம்ப நல்லது. அதை நன்றாய் ஊர்ஜிதப்படுத்தி விடலாம்.

"என்ன சாஸ்திரிகளே, என்னை ஞாபகம் இருக்கா?" என்றாள் உமா. அவளுடைய துணிச்சல் அவளுக்கே ஆச்சரியத்தை அளித்தது.

"ஞாபகம் இல்லாமல் என்ன? நேத்திக்குக் குழந்தைக்கு மாலை போட்டேளே, நீங்கதானே? குழந்தை என்னமோ நன்னாத்தான் எல்லாம் செய்தாள். ஆனாலும் நீங்க பாராட்டினது ரொம்ப ஜாஸ்தி. அப்படிக் குழந்தையைப் பாராட்டறதற்கு எல்லாருக்குமே மனஸு வராது" என்றார் சாஸ்திரி.

உமா, கண்ணில் துளித்திருந்த ஜலத்தைத் துடைத்துக் கொண்டு, "சாம்பிராணிப் புகையை ரொம்பப் போட்டுட்டேள் போல்

இருக்கு!'' என்றாள்.

''அடாடா! வாசல்லே வேணாப் போகலாமா?'' என்றார் சாஸ்திரி.

''வேண்டாம், வேண்டாம்! இங்கேயே உட்காரலாம்'' என்று சொல்லி, உமா கீழே உட்கார்ந்து, சாருவை மடியில் எடுத்து வைத்துக் கொண்டாள்.

சாஸ்திரியும் உட்கார்ந்தார்.

இதற்குள் உமாவுக்கு மனஸ்™ நன்றாய்த் திடப்பட்டு விட்டது. இருதயத்தின் உணர்ச்சியை வெளியில் காட்டாமல் பேசுவதற்குத் தைரியம் உண்டாயிற்று. முற்றும் புதிய மனிதருடன் பேசுவது போலவே சாஸ்திரியுடன் பேசத் தொடங்கினாள்.

''குழந்தை ரொம்பச் சமத்து. நேத்திக்கு இவள் டான்ஸ்™ பண்ணினது இன்னும் என் கண் முன்னாலேயே நிற்கிறது. ஏன், சாஸ்திரிகளே! குழந்தை உங்களுக்கு என்ன வேணும்? இவ அப்பா அம்மா யாரு?'' என்று கேட்டாள்.

சாஸ்திரியின் முகம் கனைங்கிற்று. ''சாரு வைத்தாலே கேக்கறயள்? அம்பாள் பராசக்தி எனக்குக் கொடுத்த குழந்தை இவள்!'' என்றார்.

உமா புன்னகையுடன், ''சரியாய்ப் போச்சு! உலகத்திலே எல்லாக் குழந்தைகளையும் அம்பாள் பராசக்தியே பெற்று வளர்த்துட்டா எவ்வளவோ சௌகரியமாயிருக்கும்'' என்று சொல்லிவிட்டுச் சாருவுக்கு ஒரு முத்தம் கொடுத்தாள்.

''ஆமாம், அம்மா! உண்மையிலேயே அம்பாள் பராசக்திதான் நம்மையெல்லாம் பெற்று வளர்க்கிறாள். அவள் ஆட்டி வைத்தபடிதான் நாம் ஆடுகிறோம். ஆனால், நாம்தான் எல்லாம் செய்யறதாக நினைச்சுண்டு அவஸ்தைப் படறோம்'' என்றார்.

''அது போனால் போறது. நீங்க ஒரு நாளைக்குக் குழந்தையை அழைச்சுண்டு எங்காத்துக்கு வரணும்'' என்றாள் உமா.

''அதுக்கென்ன, பேஷா வர்றேன். குழந்தைக்குப் பள்ளிக்கூடம் சாத்தட்டும்...''

''பள்ளிக்கூடம் சாத்துவாளேன், சாஸ்திரிகளே! நாளைக்குக் காலையிலே வந்துட்டு வாருங்களேன். நான் கார் அனுப்பி வைக்கறேன்.''

சாஸ்திரி பேசாமல் இருக்கவே உமா மறுபடியும், ''என்ன யோசிக்கறயள்? நான் என்ன ஜாதிக்காரியோ, என்னமோன்னு பாக்கறயளா?'' என்றாள்.

''அதெல்லாம் இல்லை, அம்மா! எனக்கு அந்த மாதிரி வித்தியாசமெல்லாம் ஒன்றும் கிடையாது. எனக்குக் காரிலே கீரிலே ஏறியெல்லாம் பழக்கமில்லை. பெரிய மனுஷாளோடே பழகவும் தெரியாது. அதனாலேதான் யோசித்தேன். ஆனால் நீங்கள் இவ்வளவு அபிமானத்

தோடு கூப்பிடறதினாலே வந்துட்டு வர்றேன்'' என்றார்.

அந்தச் சமயம் வாசலில் யாரோ பேசும் குரல் கேட்டது. அது உமாவுக்குத் தெரிந்த குரல். ஒரு நிமிஷந்தான் யோசிக்க வேண்டியிருந்தது. அது நல்லானுடைய குரல் என்று தெரிந்து போயிற்று. உமாவுக்குத் திக்கென்றது. அப்பாவிடம் நன்றாக வேஷம் போட்டாயிற்று; ஆனால் நல்லானிடம் பலிக்குமோ என்னவோ? ஒரு வேளை ஞாபக மறதியாக ஏதாவது சொல்லிவிட்டால்....?

உமா அவசரமாக எழுந்திருந்தாள். ''சரி, சாஸ்திரிகளே! ரொம்ப நேரமாயிடுத்து. நான் போய் வர்றேன். கட்டாயம் நாளைக்கு நீங்கள் வரணும்! வண்டி அனுப்பறேன்'' என்றாள்.

எல்லாருமாக வாசலுக்குச் சென்றார்கள்.

சாஸ்திரிக்காகக் கறிகாய் வாங்கிக் கொண்டு வந்த நல்லான் வாசலில் ஒதுங்கி நின்றான். உமா அவனைக் கடைக் கண்ணால் பார்த்துவிட்டுப் போய் வண்டியில் ஏறிக் கொண்டாள். சாருவும் பின்னோடு போய் வண்டியின் பக்கத்தில் நின்றாள்.

''சாரு! நாளைக்குத் தாத்தா எங்காத்துக்கு வரப்போறார். நீயும் வர்றயோ இல்லையோ?'' என்றாள் உமா.

''உங்காத்துக்கு நான் வந்தால் ஜில்லியோடே விளையாடலாமோ!'' என்று சாரு கேட்டாள்.

''பேஷா விளையாடலாம். ஆனால், என்னையும் விளையாட்டிலே சேர்த்துக்கணும்; என்ன?'' என்றாள் உமா.

''ஓ எஸ்!'' என்றாள் சாரு.

உமா வண்டியிலிருந்தபடியே சாருவை எடுத்து மறுபடியும் முத்தமிட்டாள். அப்போது, பின் வரும் பேச்சு அவளுடைய காதில் விழுந்தது.

''மகாலக்ஷ்மி மாதிரி இந்த அம்மாவைப் பார்க்கச்சே, நம்ம பெரிய கொழந்தை ஞாபகம் வருதுங்க. ஆனா, நம்மைத்தான் அது அடியோடு மறந்துட்டாப்பலே இருக்குங்களே!'' என்றான் நல்லான்.

''அதை என்னத்துக்காக இப்போ ஞாபகப்படுத்துகிறே நல்லான்! குழந்தை புக்காத்துக்குப் போனபோது, உனக்கு இனிமே புருஷன்தான் தாயார், தகப்பனார், குரு, தெய்வம் எல்லாரும் என்று சொன்னேன். அந்தப்படியே அவள் இருக்காள். எப்படியாவது க்ஷேமமாயிருந்தா சரி!'' என்றார் சாஸ்திரி.

உமா குழந்தையைக் கீழே இறக்கிவிட்டு, டிரைவரிடம் ''சலோ'' என்றாள்.

வண்டி கிளம்பிற்று.

''இப்படியா எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள், அப்பா! தாயார், தகப்பனார், குரு, தெய்வமா? பேஷ்!'' என்று உமா தனக்குள் சொல்லிக் கொண்டாள். அப்பாவின் மேல் அவளுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

(தொடரும்)

## திருப்பதி தந்த அதிருப்தி!

திருப்பதி.

தெருவில் பகவான் அற்புதமான அலங்காரத்தோடு பவனி வருகிறார். காணற்கரிய பேறு என்று மனம் குதிபோடுகிறது.

திருமேனி சுமப்பவர்களில் ஒருவர் நம்மை அழைத்துத் தோள் கொடுக்கச் சொல்கிறார். நமக்கு உணர்ச்சி மேலிட்டால் புல்லரிக்க, சில அடிகள் போனதும் விலகிக் கொள்கிறோம்.

"திருப்திதானே'' என்று கேட்கும்போது நன்றி பெருக்கெடுக்கிறது. சில விநாடிகள்தாம்.



"எடு பணத்தை'' என்று வழிப்பறி பாணியில் காக்கி உடுப்பிலிருந்த அந்தப் 'பரோபகாரி' மிரட்டும் போதுதான் நமக்கு உறைக்கிறது. திருமலையிலும் இப்படி நடக்கும் என்று யார் எதிர்பார்த்தது?

வேறு வழியின்றி, சட்டைப் பையில் இருந்த ஐந்து ரூபாயை எடுத்துக் கொடுத்தால், "நீயே வச்சுக்க.... வெளையாடுறியா...? இருபது ரூபா தரணும்..." கலப்படமில்லாத மிரட்டல்.

பையில் கிடந்த சில்லறைகளையும் வழித்துத் தந்ததும் அந்த ஆள் 'சுந்தரத் தெலுங்கில்' என்னவோ திட்டிவிட்டுப் போகிறான்.

சற்றுமுன் இறைவன் திருமேனி அழகைத் தரிசித்த - சுமந்த ஆனந்தம் இப்போது பறிபோனது.

இன்னொரு மிகப் பெரிய சோதனை - காத்திருக்கும் அறைகளில் தொலைக்காட்சி ஏற்பாடு. ஆபாச ஆட்டங்களை வாரி வழங்கும் "பக்திப் படங்"களை விட்டால் வேறு கௌரவமான நிகழ்ச்சிகளா இல்லை?

- டி. எஸ். பி.



SBF

# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்டு லிமிடெட்

**Fully Computerised A/C Office**

(கம்பெனி சட்டத்தின் பதிவு எண் : 18&24962)
பதிவு அலுவலகம் :- 8, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர், சென்னை – 600 004 போன் : 4993241/4990953
கிளை அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு, பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை – 600 003
போன் : 563055

ரொக்க நடவடிக்கை : காலை 8:30 முதல் மாலை 5:30 வரை
ஞாயிறு காலை 8:30 முதல் பகல் 12:30 வரை
வரவு செலவுகள் அங்கத்தினர்களுடன் மட்டுமே
(வெள்ளிக் கிழமை விடுமுறை)

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ. 300/- வழங்கப்படும்.<br>சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும். |
|---|---|

1. Prompt and satisfying service
2. Efficient Management
3. Financial strength backed by a prosperous and reputed group
4. Loans secured by gold and immovable assets.

இயக்குநர்கள் :

திரு T. V. சீனிவாசன்
திரு P. K. சந்திரசேகரன்
திரு ப்ரவின் கோவிந்தராவ்
திருமதி P. C. சுந்தரவதனி
திரு K. G. கிருஷ்ணன்
திரு P. K. C. ரமேஷ்
திரு D. தனுஷ்கோடி
திரு P. C. பாஸ்கர்
திரு K. R. நிரஞ்ஜன் குமார்
திரு P. C. ஷியாம் சுந்தர்

## OUR VALUED DEPOSITORS



Mr. D. B. SAXENA
Past President
The Institute of Company Secretaries of India



'இன்னிசைப் பேரரசு'
T. V. SANKARANARAYANAN

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும்

# பட்ஜெ


என்னது மீட்டர் போட்டாதான் வருவியா?
பெட்ரோல்னா என்னன்னு தெரியுமாய்யா உனக்கு?
அதோட விலை தெரியுமாய்யா? உனக்கெல்லாம்
ஆட்டோ கேட்குதா? வந்துட்டாளுங்க காலங்
கார்த்தால! சாவுக்கிராக்கி நடையக்கட்டுயா!
FOR HIRE
TNT 999


அரிசி விலையை
இப்படி அநியாயம
ஏத்திட்டீங்களே!


நீ தானே பலசரக்கு லிஸ்ட்ல ஒண்ணு கூட
மிஸ் ஆகக் கூடாதுன்னு சொன்னே!


அரிசி விலையை
இப்படி அநியாயம
ஏத்திட்டீங்களே!


இந்தா பிடி
சாக்லேட்டுக்கு
ஒரு ரூபாய்!


ஒரு ரூபாய்க்கு எவன் எதை
விக்கறான்? சரி சரி குடுங்க,
மழைக்காலத்துல மடிச்சு
கப்பல் விடலாம்!


அரிசி விலையை
இப்படி அநியாயம
ஏத்திட்டீங்களே

# பஜார்!

—மதி...


எனக்கென்னய்யா
தெரியும்! போய்
ஃபுட் மினிஸ்டர்-
கிட்டக் கேளு!


எனக்கென்னய்யா
தெரியும்? போய்
மன்மோகன்-
சிங்கிட்ட கேளு!


எனக்கென்னய்யா
தெரியும்? போய்
உலக வங்கிட்ட
கேளு!


பொதுக்கூட்டத்துல ரூபாய்க்கு ஒரு கிலோ
அரிசின்னுல்லாம் பேசாதீங்கன்னு
அப்பவே சொன்னேன்!
கேட்டீங்களா தலைவரே....?


டாக்டர் எனக்கு
மைனர் ஆபரேஷனா,
மேஜர் ஆபரேஷனா?


இருங்க...
பட்ஜெட்டை
பார்த்துட்டு
சொல்றேன்!


காஸ் விலை
ஏறிப் போச்சுன்னு
ஒப்பாரி போராட்டம்
நடத்தினீங்களாமே,
பழைய விலைக்கே
கொண்டாந்திருக்கேன்!

# அவரவர் உலகம்

பொன்மலை தாயுமானவன்

"ஏய் பாரதி! இங்கே வெச்ச ஃபைல் எங்கே?" அலுவலகம் கிளம்பும் பரபரப்பில் கத்தினான் மணி. பாதி 'டக்கின்' செய்த சட்டை துருத்திக் கொண்டிருந்தது. சீவப்பட்ட நிலையில் சீப்பு தலையிலேயே இருக்க, காலில் சாக்ஸ் இல்லாமல் ஷு மாட்டியிருந்தான்.

ஏழு மணி வரை நிம்மதியான தூக்கம். எழுந்து அலுவலகம் போவதற்குள் வீடு இரண்டுபட்டு விடும். அவன் அலுவலகம் போனதும் வீடு அசாத்திய மௌனம் சாதிக்கும்.

"பாரதி, காதில விழலை?"

"என்னங்க?"

ஈரக்கையைத் துடைத்தபடி வந்தாள் அவனது தர்மபத்தினி.

"இங்கே வெச்ச ஃபைல் எங்கே போச்சு? வரவர...."

"நைட் பெட்ரூம்ல ஃபைல்ஸ் பாத்திங்களே, அங்கேதான் இருக்கும்."

அசடு வழிந்தபடி பெற்றுக் கொண்டான்.

"சாப்டியா இல்லையா?"

சமாதானத்திற்கு ஏதாவது கேட்க வேண்டுமே என்கிற திடீர் கரிசனம்.

"இன்னிக்கு விரதம். மறந்துட்டிங்களா? நைட்தான் சாப்பாடு. நீங்க ஃபைல்ஸ் தேடுற டென்ஷன்ல நான் சாப்பிட முடியுமா?"

"ஸாரிடா...."

"இதென்ன தலையில சீப்பு?"

"அடடா."

"சாக்ஸ் போடலையா? அடக் கடவுளே! கொஞ்சம் முன்னாடி எழுந்திருக்கக் கூடாதா? ஆபீஸ் வேலையை வீட்டுக்குக் கொண்டு வந்து கண் முழிச்சா இப்படித்தான்."

ஒரு வழியாகக் கணவனை அனுப்பி விட்டு சோபாவில் அமர்ந்தவள் கண் கிறங்கியது. வயிறு குழைந்து ரீங்காரமிட்டது.

பாரதி சோபாவில் தலைசாய்த்து சுருண்டு கொண்டாள். எரிச்சலாக இருந்தது.

என்ன பழக்கம் இது? பாத்திரக் கடையில் யானை புகுந்த மாதிரி ஒரே டென்ஷன் சத்தம்! ச்சே...

கொஞ்சம் முன்னாடி எழுந்திருக்கக் கூடாதா? அப்படி என்ன தூக்கமோ?

பாவம், அவரும் தான் என்ன செய்வார்? பதவி உயர்வில் இலட்சியம் வைக்கிறவர்கள் ஆபீஸ் வேலைகளில் மெனக்கெட வேண்டி இருக்கிறது. துரிதமான செயல்பாட்டிற்கு ஆபீஸ் வேலையை வீட்டிலும் செய்ய வேண்டி இருக்கிறது. அவரது ஆபீஸ் வேலைகளில் ஏதாவது உதவ முடியுமா என்று பார்க்க வேண்டும்.

நினைத்துக் கொண்டாள். அழைப்பு மணி ஒலித்தது. பாரதி எழுந்து கதவு திறந்தாள். வசுமதி நின்றிருந்தாள். பால்ய சிநேகிதி.

"ஹாய் வசு, வா வா. வாட் எ ஸர்ப்ரைஸ்!?"

தன் தோழி வசுமதியைக் கட்டிக் கொண்டாள் பாரதி.

"எங்கே உன் புருஷன்? ஆபீஸ் போயாச்சா?"

"ஓ எஸ். இப்பத்தான் கிளம்பினார். நீ எப்படி இருக்கே? ஏதாவது விசேஷம் உண்டா?"



''விசேஷம்னா?''

''உண்டாகி இருக்கியா?''

''ஸ்டுப்பிட். இன்னும் எத்தனை காலத்திற்குடி இப்படிக் கேட்டுக்கிட்டு இருப்பீங்க? உண்டாகி இருக்கியா, முழுகாம இருக்கியா, குளிக்கிறியா? ச்சே எத்தனை விதமான கேள்விகள்?''

பாரதி புன்சிரித்தாள்.

''நான் கேட்டதில் என்ன தப்பு?''

''நிறைய. கல்யாணம் பண்றது குழந்தை பெத் துக்கவா? வம்ச விருத்திக்குத் தான் பெண்ணா? பிள்ளை பெறுகிற இயந்திர மில்லை பெண். பெண்களே இப்படிக் கேள்வி கேட்டுக் கிட்டு இருந்தா, பெண் சுதந்திரம் எப்படிச் சாத்தியமாகும்?''

''உண்மையில் நீ பேசறது எதுவுமே புரியலை வசு.''

''எப்படிப் புரியும்! ஒரு ஆணை மயக்கி கைக்குள் போட்டுக்கிறதுதான் வாழ்க்கைன்னு நினைக்கிற சராசரி இல்லையா நீ? இப்படித்தான் பேசுவ!''

''உன்கிட்ட வாதம் பண்ண முடியாது தாயே. உன் வீட்டுக்காரர் எப்படி இருக்கார்? அவரும் வந்திருக்கார் இல்லையா?''

''எதுக்கு? செக்யூரிட்டிக்கா? ஏண்டி, நீங்க எல்லாம் மாறவே மாட்டிங்களா? கல்யாணமான பொண்ணு புருஷன் இல்லாம வந்தா கேவலமா? பெண்டாட்டி துணையில்லாம ஆம்பளை எங்கே எங்கேயோ சுத்துறான். அவன்கிட்ட இப்படி கேட்பீங்களா?''

''ஏன் கோபப்படறே வசு...?''

''யாருக்கும் புரியலை பாரதி. ஒரு பெண் மனசு பெண்ணுக்கே புரியலை. எங்க அம்மா, ''வந்தா புருஷனோட வா. தனியா வரதானா வீட்டுக்குள்ளே நுழையாதே'னு சொல்லிட்டா. எச்சிக் கையால் பெண்டாட்டியை அடிக்கிற வனை, எப்படி புருஷனா ஏத்துக்க

முடியும்? போதும்டா உன் சகவாசம்'னு முறிச்சிக்கிட்டு வந்துட்டேன்.''

''ஐயோ...''

''கூவாதே பாரதி. குடும்பம்னா புருஷன். அவன்தான் தலைவன், கடவுள் எல்லாம்! இந்த ஒரு தலைப்பட்சமான சடங்குகளுக்கு நான் பலியாகணுமா?''

''.....''

''ஏன் பேச மாட்டேங்கற? அம்மா, வீட்டு வாசப்படி ஏற விடலை. சரிதான் போடீன்னு வந்துட்டேன். லேடீஸ் ஹாஸ்டல்ல இருக்கேன். எனக்கு உத்தியோகம் தான் செக்யூரிட்டி பாரதி.''

''அப்பா, அப்பா என்ன சொன்னார்?''

''அது வாயில்லா ஜீவன். அது என்ன சொல்லும்? அம்மா சொன்னா வாசலை மறிக்கும். சரின்னா 'வாம்மா'னு கூப்பிடும். போக்க. எல்லாம் போக்க. இனி எனக்கு நான்தான் துணை...''

''பின்னாடி கஷ்டம் வக...''

''என்ன கஷ்டம்? உடம்புக்கு முடியாம படுத்துட்டா என்ன பண்றதுன்னு கேக்கறியா? தலை சுத்தல், சோர்வுனு மெல்லெல் டயத்தில் சுருண்டு கிடந்தப்ப 'என்னடி கேடு'ன்னு எட்டி உதைச்சவன் என் புருஷன். உதவிக்கு ஆள் இருக்குன்னு நினைக்கிறது, சுத்த ஹம்பக் பாரதி. நமக்கு நாமதான் துணையா இருக்க முடியும்.''

''எனக்கு ரொம்பக் கவலையா இருக்குடி வக...''

''எதுக்கு? அறுத்துட்டு வந்துட்டா லேன்னா...?''

''முரட்டுத்தனமா பேசறே வக!''

''பேச வெச்சிட்டாங்க பாரதி. சரி, நான் கிளம்புறேன்.''

''இருப்பா. இவ்வளவு தூரம் வந்துட்டு சாப்பிடாம போறியே...''

''குடிக்கக் கொடு வக. இன்னொரு நாள் வரேன் சாவகாசமா...''

''தோதோ...''

**பா**ரதி பம்பரமாகச் சுழன்றாள். அடுப்பில் வாணலியை ஏற்றி சூடேறு வதற்குள் வெங்காயம், மிளகாய் நறுக்கி ரவா உப்புமா கிளறினாள்.

அவளது இயக்கத்தை மௌனமாகப் பார்த்த வசுமதி சொன்னாள் :

''நீ இயந்திரமா மாறிட்டே பாரதி...''

பாரதி மௌனம் சாதித்தாள். வசுமதியின் வேகமும், சுதந்திர தாகமும் அவளையும் தொற்றிக் கொண்டது. சாப்பிட்டு, விடை பெற்று அவள் போனதும் வேலைக்காரியாக, தாசியாகத் தான் இயங்குவதை தன்னிரக்கத்தோடு யோசித்தாள். காலை நேர ஆர்ப்பாட்டம் நினைவுக்கு வந்தது. கசப்பாக உணர்ந்தாள்.

வசுமதி விடை பெற்றுச் சென்றதும் ஒரு வேலையும் செய்யத் தோன்றாமல் முடங்கினாள்.

கணவன் தன்னைச் சார்ந்து இருப்பது அவளுக்கு சுகமாக இருந்தது. அவனுக்கு அனுசரித்து, சமயத்தில் விரட்டி, அழுது காரியம் சாதிப்பது ரசிக்கத்தக்க சாகஸமாகவே அவள் நினைத்திருந்தாள்.

ஆனால் வசுமதியின் ஆவேசப் பேச்சு அவளுள் புயலைக் கிளப்பியது.

**வா**சல் கதவு திறந்து மணி உள்ளே நுழைவது கூடத் தெரியாமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

''பாரதி, நான் இன்னிக்கு லீவு போட்டுட்டேன்....'' பாரதி திடுக்கிட்டாள். கணவன் வருகை தெரிந்தும் தான் பாரா முகமாய் இருக்கும் குற்ற உணர்வு எழுந்தாலும் அவனைக் கவனிக்காதவள் போலவே இருந்தாள்.

''ஸாரி டியர். கோபமா?''

மோவாயை நிமிர்த்தி குறுகுறுவெனப் பார்த்தான். பாரதி முகத்தை திருப்பிக் கொண்டாள்.

''நீ ஏற்கெனவே வீக்கா இருக்கே பாரதி. பசியோடு வேலை செய்தா மயக்கம் வந்துடும். அதான் லீவு போட்டுட் டேன். இன்னிக்கு நைட் நான்தான் சமையல்....''

அவளைத் தன் மேல் சாய்த்துக் கொண்டான்.

''நீதான் எஜமானியாம். நீ சொல்றதை நான் செய்வேனாம்! ஓகே? என்னடா சோர்வா இருக்கே. காப்பி போடவா?''

அவனது அருகாமை அவளை அலைக்கழித்தது. அவனது அன்பும் தழுவலும் அவளை நிலைகுலைய வைத்தது. அவன் மடியில் தலை சாய்த்துக் குமுறி அழுதாள்.

மணி புரியாமல் அமர்ந்திருந்தான்.



''சீதா...! உன்னை முதன் முதலா பார்த்தப்ப நீ சீதா மாதிரியே இருந்த தாலதான் என்னோட மனசைப் பறி கொடுத்துட்டேன்.''

''யாருங்க அந்த சீதா?''

''போச்சுபோ... இதே கேள்வியைத் தான் உஷாவும், உமாவும் கேட்டாங்க!''

– சீர்காழி வி. ரேவதி.



''டாக்டர் சார்! என் சொத்தில் பாதியை உங்களுக்குத் தர்றேன். தயவு செய்து எனக்கு ஆபரேஷன் பண்ணா தீங்க!''

''என்னம்மா இது. தர்மசங்கடமாப் போச்சு! உங்களுக்கு ஆபரேஷன் செய்தா, சொத்தில் பாதியைத் தர்றதா உங்க மருமக இப்பத்தான் சொல் லிட்டுப் போறாங்க...!''

- அ. சுகுமார்.



''மக்கள் படத்தைப் பார்த்துட்டு பேசிக்கிட்டே வரணும், அந்த மாதிரி பெயர் ஒண்ணு சொல்லுய்யா!''

''படமா இது!''

– கே. ஆர். ரவிக்குமார்.

# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.



✱ சேஷன் : சமரசம்?



✱ மம்தா : வங்காள வாழப்பாடி

# சேஷனுக்கு சவால்!

தம் அதிகாரங்களுக்கு வானமே எல்லை என்கிறார் சேஷன். அவருக்கு வெற்றிகரமாகச் சவால் விட்டுக் கொண்டிருப்பவர்கள் இருவர்தாம். ஒருவர் தமிழ் நாட்டு 'ஜெ'. மற்றவர் மேற்கு வங்காளத்து 'ஜோ'.

மாநிலத் தேர்தல் அதிகாரி நியமன விஷயத்தில் மேற்கு வங்க அரசுக்கும் சேஷனுக்கும் மோதல் ஏற்பட்டதில் மேற்கு வங்க சட்டசபையிலிருந்து ராஜ்யசபைக்குத் தேர்தல் நடைபெறவில்லை. மேற்கு வங்க அரசு கோர்ட்டுக்குச் செல்லவே, சேஷன் பணிந்து விட்டார்.

இப்போது ஓட்டர்களின் அடையாள அட்டை பற்றிய பிரச்னையில் மீண்டும் மோதல். இது காரணமாக மேற்கு வங்காளத்தில் ஒரு மக்கள் சபை இடைத்தேர்தலும் இரண்டு சட்டசபை இடைத்தேர்தல்களும் தடைப்பட்டுள்ளன. மீண்டும் நீதிமன்றத்தை நாடியது மேற்கு வங்க அரசு. அடையாள அட்டை இல்லாமல் தேர்தல் இல்லை என்ற தம் முடிவில் சேஷன் உறுதியாயிருந்தாலும் இப்போது இந்த இடைத் தேர்தல்களை நடத்த இணங்கிவிட்டார்.

## வங்காள வாழப்பாடி!

மேற்கு வங்கத்துக்கும் தமிழ்நாட்டுக்கும் இன்னோர் ஒற்றுமையும் உண்டு. இரண்டு மாநிலங்களிலும் காங்கிரஸ்கட்சி எதிர்க்கட்சி. ஆளும் கட்சிக்கோ முன்னணிக்கோ அபார பலம்.

தமிழ்நாட்டுக்கு ஒரு வாழப்பாடி என்றால் மேற்கு வங்கத்துக்கு ஒரு மம்தா பானர்ஜி. இருவரும் நாளுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டே ஆட்சியைக் கவிழ்த்து விடலாமென்று நினைக்கிறார்கள்.

அண்மையில் கல்கத்தாவின் புறநகர்ப் பகுதியொன்றில் மம்தா பானர்ஜியின் சொற்பொழிவு நடைபெறுவதாயிருந்தது. என்ன காரணத்தாலோ அந்த நிகழ்ச்சி ரத்து செய்யப்பட்டது. நிகழ்ச்சி நடைபெற விருந்த சமயத்தில் மம்தா பானர்ஜியின் காரில் அந்தப் பகுதிக்குப் போய்க் கொண்டிருந்த சில யுவ காங்கிரஸ் தொண்டர்கள், சில சமூகவிரோதிகளால் தாக்கப்பட்டனர். அவர்களில் ஒருவர் பின்னர் மருத்துவமனையில் இறந்து போனார்.

இந்தத் தாக்குதல் ஒரு அரசியல் சூழ்ச்சி என்றும் தாக்கியவர்களின் குறி தாம் தானென்றும், தாம் அந்தக் காரில் இல்லாததால் தப்பியதாகவும் மம்தா பானர்ஜி அறிக்கை விட்டுள்ளார். ஆனால் இது வெறும் கொள்ளையர்களின் வேலை என்கின்றனர் போலீசார்.

## சபாஷ் பெறாத சுபாஷ்

மேற்கு வங்கத்தின் விளையாட்டு மற்றும் சுற்றுலா மந்திரி சுபாஷ் சக்கரவர்த்தி மிகவும் சுறுசுறுப்பான மனிதர். அவர் தம்மையும் தம் இலாகாக்களையும் பிரபலப்படுத்த அவ்வப்போது கலாசார விழாக்கள் நடத்தினார். இவற்றில் பெரும் பங்கு சினிமாக் கலைஞர்களுடையதுதான். இத்தகைய விழாக்களால் கட்சியின் கொள்கைத் தூய்மை கெடுவதாகப் பல மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்டுகள் கருதுகிறார் கள்.

அண்மையில் சுபாஷ் சக்கரவர்த்தி நடத்திய விழா ஒன்றில் தற்போது புகழ் (?) பெற்றுவிட்ட 'சோலிகே பீச்சே' பாடல் பாடப்பட்டது. இது கட்சியில் பெரும் புயலை எழுப்பியுள்ளது. இத்தகைய தரங் குறைந்த நிகழ்ச்சிகளில் கட்சித் தொண்டர்கள் கலந்து கொள்வதையும், அவற்றுக்காகப் பணம் திரட்டுவதையும் தடை செய்து அறிக்கை வெளியிட்டுள்ளது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி.

கல்கத்தாவிலிருந்து :
சு. கிருஷ்ணமூர்த்தி.



# சுஜாதா

# 9

# வேட்டை

*அறிவையும் புத்திசாலித்தனத்தையும் புறக்கணித்தால்*
*மக்கள் நூறு மடங்கு பலன் அடைவர்.*
*- தாவ் தே சிங்*

அர்ஜுன் ஜன்னல் பக்கம் சென்று கொஞ்ச நேரம் வெளியே பார்த்துக் கொண்டிருந்தார். சொல்லலாமா, வேண்டாமா என்று யோசிப்பது போலப்பட்டது. நான் ஏதும் கேட்கவில்லை. அவரே பேசட்டும் என்று காத்திருந்தேன். கடைசியில் தீர்மானித்ததுபோல, ''சரி, சொல்லிடறேன்'' என்றார். என்னைப் பார்த்து ஸ்மைல் அடித்தார். அந்தப் புன்னகையில் அபரிமிதமான பாசாங்கு இருப்பதாக எனக்குத் தோன்றியது. நானும் பதிலுக்குச் சிரிப்பேன் என்று எதிர்பார்த்தார். மாட்டேன். எதற்கு சிரிக்க வேண்டும்? ''நம்முடைய திருமண வாழ்க்கையில் ஒளிவு மறைவு எதுவுமே இருக்கக் கூடாது என்கிறதுக்காக நான் இதை உன்கிட்ட சொல்றேன் ரேகா. அந்த ஸ்பிரிட்ல எடுத்துக்கணும். கல்யாணத்துக்கு முன்னாடி நோஞ்சலின்னு ஒரு பெண், ஆபிஸ்ல செக்ரட்டரியா இருந்தா. அவகூட கொஞ்சம் க்ளோஸாவே பழகியிருக்கேன்.

நோ செக்ஸ்! பட், பர்த் டே கார்டெல்லாம் அனுப்பிச்சிருக்கேன். நிறையவே ஆபிஸ் மேட்டர் எல்லாம் பேசியிருக்கேன். அவளுடைய சொந்த பிரச்னைகளையெல்லாம் தீர்த்து வெச்சிருக்கேன். அவள் அண்ணன் கூட ஒரு ப்ராப்பர்ட்டி விஷயமா தகராறு இருந்தது. அதை தீர்த்து வெச்சேன். இதையெல்லாம் அவ மிஸ்டேக் பண்ணிண்டு என் கல்யாணம் ஏற்பாடு ஆன பிற்பாடு, நான் என்னவோ அவளை ஏமாத்திட்டதா ஆபிஸ்ல வந்து ஒரு ஸீன் க்ரியேட் பண்ணா.

''உடனே நாங்க வேலையில இருந்து நீக்கிட்டோம். அவ உன்கிட்ட வந்து உன்னை சந்திக்க முயற்சி செய்து, ஏதாவது கலாட்டா கிலாட்டா செய்தா, நீ என்ன சொல்வே? ''

நான் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. ஆபிஸ் ஸ்னேகம் என்றால் என்ன அது, எதுவரை போகும் என்பதெல்லாம் தெரியாத நான் என்ன சொல்வேன்?

''எனக்குத் தெரியாது. எல்லாம் அவர் ஆபிஸ் விஷயம்னு சொல்லி அனுப்பிச்சுருவேன்'' என்றேன்.

''தட்ஸ் தி ஸ்பிரிட்''என்றார். முகத்தில் மலர்ச்சியும் ஆறுதலும் வந்தது. ''எல்லாம் நான் பார்த்துக்கறேன்.''

''அவ என்னை வந்து சந்திப்பாளா?''

''சந்திக்காம பார்த்துக்கறேன். இருந்தும் அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் வந்தா நான் ஏன் முதல்லயே இதைச் சொல்லலைன்னு நீ என்னைக் கேட்கக் கூடாது பாரு? நான் ரொம்ப எளிமையான மனுஷன். எனக்குப் பொய் சொல்லத் தெரியாது. உனக்குத்

தெரிஞ்சிருக்குமே. சீட்டாடியான்னு என்னைக் கேட்டியே, நான் எப்பவாவது பொய் சொன்னேனா? ஆடறேன்னு, அது எனக்குப் பழக்கம்னுதானே சொன்னேன்?''

''பழக்கம்னு சொல்லலை. எப்பவாவது ஆடுவேன்னு சொன்னீங்க.''

''எப்பவாவதுன்னா என்னங் கறதைப் பொறுத்தது. ஆனா நான் பொய் சொன்னேனா? சொல்லு! நான் பொய் சொன்னேனா?''

''இல்லை'' என்றேன் தயக்கத்துக்குப் பின்.

''கீதாஞ்சலி நமக்கு ப்ராப்ளம் இல்லை. நோ ப்ராப்ளம்! ரைட்?''

''ரைட்'' என்றேன்.

எனக்குக் கூட காலேஜில் ஒருபையன் காதல் கடிதம் எழுதினான்.

அது என்னவோ சிரிப்பான சமாசாரமாக இருந்தது. அதுபோல்தான் இது என்று எண்ணிக் கொண்டேன்.

''கல்யாணத்துக்கு முன்னாடி நடந்ததெல்லாம் மறந்து போய், ரெண்டு பேருமே க்ளீன் ஸ்லேட்! என்ன?'' என்றார். நான் தலையாட்டினேன்.

இருந்தும் கீதாஞ்சலி என்கிற எண்ணம் மனசில் அவ்வப்போது உறுத்திக் கொண்டுதான் இருந்தது.

தோடர்கள் வாழும் பழைய குடிசைகளை டூரிஸ்டுகளுக்குக் காட்டுவதற்காக வைத்திருந்தார்கள். அவர்களில் சிலர் ஜீன்ஸ் அணிந்து கொண்டு அப்போதுதான் பழைய உடைக்கு மாறினவர்கள் போலத் தோன்றியது. நாம் அவர்களைப் பார்க்கிறோமா, அவர்கள் நம்மை வேடிக்கை பார்க்கிறார்களா என்று குழப்பமாக இருந்தது. எனக்கு என்னவோ ஹனிமூன் பிடிக்கவே இல்லை. எப்படாப்பா சென்னைக்குத் திரும்பிச் செல்வோம் என்று பதற்றமாக இருந்தது. அர்ஜுன்





ஓர் அழகிய பெண்ணினைக் கண்டவுடனேயே தனது பார்வையைக் கீழே தாழ்த்திக் கொள்பவனின் செயலானது, இறை ஏட்டில் ஒரு வணக்கமாகக் கருதப்படுகிறது.

– நபிகள் நாயகம்
தகவல் : இராம. பார்த்திபன்

எது தவறினாலும் ரேஸையும் சீட்டாட்டத்தையும் விடவில்லை. எதாவது சாக்கு போக்கு சொல்லிக் கொண்டு சரியாக மூன்று மணி ரேஸுக்கு ஆஜராகிவிடுவார். ராத்திரி சீக்கிரமே சாப்பிட்டுவிட்டு எட்டுக்குள் மப்ளரைச் சுற்றிக் கொண்டு டார்ச் லைட்டை எடுத்துக் கொண்டு புறப்பட்டுவிடுவார். திரும்பிவர ஒருமணி, ரெண்டு மணியாகும். ஒருநாள் இதுபற்றிச் சண்டை போட வேண்டும் என்று தீர்மானித்தேன். இப்பவே வேண்டாம்! கல்யாணம் ஆகி ஒரு வாரம் ஆகவில்லை.

கொடைக்கானல், கோவா போவதாகத் தான் இருந்தது. அதற்குள் அர்ஜுனுக்கு ஆபீசிலிருந்து போன் வந்து அவசரமாக அவர் பம்பாய் போகவேண்டும் என்று செய்தி வந்தது.

''என்ன பண்ணுவது?'' என்றார்.

''என்ன?''

''நீ மெட்ராஸ் போக விரும்புகிறாயா? இல்லை டில்லியா? மெட்ராசில் நம் வீடு இன்னும் தயாராகவில்லை. அப்பா, அம்மா கோயமுத்தூரில் இருக்கிறார்கள்.''

''அங்கே போகிறேனே!''

''இடம் போதாது, அப்பா வீட்டில்.''

''பரவாயில்லை. அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்கிறேன்.''

''அப்பா, அம்மாவிடம் புகார் சொல்லப் போகிறாயா?''

''எதைப்பற்றி?''

''சீட்டாடுவதைப் பற்றி.''

''ஆமா!''என்றேன்.

ஒரு நிமிஷம் அவர் கண்கள் குறுகின. ''ப்ராப்ளம் க்னைனெ ப்ராப்ளம்''என்றார். ஜெர்மன் தெரியுமாம் அவருக்கு.

''நான் பம்பாய்க்கு வரதில் உங்களுக்கு என்ன கஷ்டம்?''

''நான் பாட்டுக்கு ஆபிஸ் விஷயமா போய்டுவேன். நாள் முழுக்க ஓட்டல் ரூம்ல போர் அடிச்சுக்கிட்டு இருக்கணும் நீ.''

''ஆபீஸ் விஷயமா? இல்லை அங்கயும் ரேஸா?''என்று இவர் கொண்டு வந்திருந்த பிடிஐ டெலிப்ரிண்டர் செய்தியைக் காட்டினேன்.

''மகாலக்ஷ்மி ரேஸஸ் பிகின் தர்ஸ்டே.''

''சேச்சே!'' என்றார். அவர் முகம் சின்னதாகிவிட்டது. ரேஸுக்குத்தான் முக்கியமாகப் போகிறார்.

''அர்ஜுன் எனக்கு பயமா இருக்கு!''

''என்ன பயம்?''

''நீங்க பொய் சொல்லலை! ஆனா நிறைய மறைக்கிறீங்க. மறைக்கவெச்சது எப்படியாவது வெளில வரபோது உண்மை சொல்றீங்க!''

''எப்டி? எப்டி? கீதாஞ்சலியைப் பத்தி நான் உங்கிட்ட மறைச்ச வெச்சா சொன்னேன்?''

''அது எதுக்கு சொன்னீங்கன்னு புரியவே இல்லை. ஆனா அர்ஜுன் யு ஆர் நாட் ஸ்ட்ரெய்ட் ஃபார்வர்டு.''

அவர் அடிபட்ட குரலில் ''எம் ஐ நாட் ஸ்ட்ரெய்ட் ஃபார்வர்டு? எம் ஐ நாட்?'' என்றார் அதிர்ச்சியுடன், தன் மார்பைத் தொட்டுக் காட்டிக் கொண்டு.

''ஆமா அப்படித்தான்.''

''சரி, நீயும் பம்பாய்க்கு வா!என் கூடவே இரு. தலால் ஸ்ட்ரீட்டுக்கு வா. ஸ்டாக் எக்ஸ் சேஞ்சை வேடிக்கை பாரு. நோ ப்ராப்ளம்! நோ ஒஃ ப்ராப்ளம்'' என்றார். அவர் விரல்கள் நடுங்கின. எனக்கு இவரை எப்படிச் சமாளிக்கப் போகிறேன் என்கிற கலக்கம் அதிகமாகியது.

நான், ''இல்லை. என்னை டில்லிக்கே அனுப்பிச்சுருங்க. எனக்கு அப்பா அம்மாவைப் பார்க்கணும் போல இருக்கு. என் தங்கையைப் பார்க்கணும் போல இருக்கு. வாரம் பூரா குதிரைகளையும் இஸ்பேட் ஆட்டத்தையும் பார்த்து அலுத்துப் போச்சு. ரொம்ப நாள் ஆயிட்டாப்பல இருக்கு...''

''இல்லை! நீ பம்பாய்க்கு வா!''

''இல்லை, டில்லிக்கே போறேன்.''

அர்ஜுன் யோசித்து ''ஆல்ரைட்! டில்லியும் வேண்டாம், பம்பாயும் வேண்டாம். உங்க அப்பா அம்மாகிட்ட மாப்பிள்ளை சரியா வெச்சுக்கலைன்னு அழ வேண்டாம்! நான் பம்பாய்க்குப் போய் உன் சந்தேகத்துக்கு ஆளாக வேண்டாம். திரும்ப மெட்ராஸ் போயிடலாம். பம்பாய்க்கு, வேற யாரையாவது அனுப்ப ஆபிஸுக்கு ஃபாக்ஸ் கொடுத்துர்றேன் சரிதானே?''

நான் பதில் சொல்லவில்லை.

**ரா**த்திரி சீட்டாடப் போகவில்லை. இரண்டு பேரும் டிவி பார்த்து விட்டு, போர்த்திக் கொண்டு படுத்துவிட்டோம்.

நடு இரவு அபகரமாக டெலிபோன் அடித்து, அதை எடுத்து அர்ஜுன் தூக்கக் கலக்கமாக ''அலோ''சொல்ல, அதன் கர கரப்பான அதட்டல் இரவின் நிசப்தத்தில் எனக்கும் தவளைக் குரல் போல் கேட்டது.

''அர்ஜுன்! என்ன நீ, பாம்பே போகலை?''

''போலை பார்ட்னர்! பெண்டாட்டி வேணாம்னுட்டா!''

"நான் இப்ப ராஜூவுக்கு என்ன பதில் சொல்வேன்?"

"வேற யாரையாவது அனுப்பு."

"உன் திறமை வருமா அவங்களுக்கு? கமான்! கல்யாணம் ஆனப்புறம் ஆபிசை மறந்துருவியா?"

"நோவே!"

"கீதாவானா உன்னையே எதிர்பாத்துக்கிட்டு இருக்கா."

"நோ! முடிவா வரமாட்டன்னு சொல்லு" அதன்பின் ஒரு பெண் குரல் "என்னம்மா அர்ஜுன்... பெண்டாட்டி மயக்கத்தில் எங்களையெல்லாம் மறந்துட்டியா. பார்ட்டி வார்ட்டி கிடையாதா?"

"எல்லாம் வந்தப்புறம் கண்ணு! தூங்கப் போ! அனாசாரமான காலம் - முழிச்சுக்கிட்டு இருக்காதே. வை" என்று வைத்தார்.

"யாரு?"

"ஆபிஸ்" என்றார்.

"இந்த ராத்திரிலயா?"

"எங்க ஆபிஸ் இருபத்து நாலுமணிநேரமும் திறந்திருக்கும்."

"அது என்ன ஆபிஸ்?"

"காலைல சொல்றேன்!" என்று திரும்பிக் கொண்டு தூங்க, கொஞ்சம் சன்னமான குறட்டை ஒலி கேட்டது.

நான் படுக்கைக்கருகில் விளக்கைப் போட்டுக் கொண்டு அப்பா கொடுத்த சின்ன, தாவ் புத்தகத்தை எடுத்துப் படித்தேன். எப்பவாவது மனசு அலைஞ்சா இந்தப் புத்தகத்தைப் படி என்று கொடுத்திருக்கிறார் எனக்கு. இதுவரை அந்த தேவை ஏற்படவில்லை.

முதன் முறையாய் ஒருவிதமான கலக்கத்தை வயிற்றில் உணர்ந்தேன். என்னருகில் தலையணையை மடித்து, முகத்தை மூடிக் கொண்டு லேசாகக் குறட்டை விட்டுக் கொண்டு தூங்கும் இந்த பிரகிருதியை நான் முழுவதும் அறிய முடியாது. இவர் ரொம்ப அழுத்தமான ஆசாமி. உண்மையைச் சொல்வார். மறைக்கவும் செய்வார் என்று மெல்ல மெல்லப் புலப்பட, அவரைப் பார்த்தபோது ஒரு விதமான அபத்திரமாகத்தான் இருந்தார். அந்த மூக்கைத் திருக வேண்டும் போன்ற அநீதமான ஆசையை நிராகரித்து விட்டு,

Bend and you will be whole
Curl and you will be straight
Keep empty and you will be filled
Grow old and you will be renewed.....

எனக்கென்னவோ லாவ்ட்ஸுவின் இந்த வாக்கியங்கள் புரியாவிட்டாலும் ஆறுதல் அளித்தன.

திட்டமிட்டது போல் சென்னைக்கு வந்து சேர்ந்தோம். எங்களுடைய ஃப்ளாட் பாதி தயாரான நிலையிலேயே குடி வந்து விட்டோம். ரங்காச்சாரி ரோடு பிரியும் பாதையில் ஒளித்து வைத்த சந்தில் அமைதியான இடத்தில் வில்லா என்று பேர் படைத்த எட்டு தனிப்பட்ட ஃப்ளாட். கூர்கா, பேஸ்மெண்ட் பார்க்கிங், டிஷ் ஆண்டெனா என்றெல்லாம் அமர்க்களமாகத்தான் இருந்தது. இரண்டு குடும்பங்கள்தான் குடிவந்திருந்தோம். தச்சு வேலையும் மொஸேய்க் வேலையும் இன்னும் சில அறைகளில் முடியவில்லை. ஆபிஸ் ரூமும் படுக்கை அறையும் தயார்ப்படுத்திக் கொண்டு தினம் ஓட்டலிலிருந்து சாப்பாடு வரவழைத்துச் சாப்பிட, அர்ஜுன் ஒழுங்காக ஆபிஸ்போய், ஒழுங்காகத் திரும்பி வந்து, ஒழுங்காக எனக்கு சாயங்காலம் முத்தமோ, சாக்லேட்டோ பரிசாகக் கொடுத்து, சம்பிரதாய ரியோ காப்பி கணவர் போலத்தான் தினசரி நடந்து கொண்டார். சீட்டாட்டத்தைப் பற்றிய என் கவலையெல்லாம் கொஞ்சம் மிகையானவை என்று அறிந்து வெட்கப்பட்டேன். அர்ஜுன் ஒரு அமெரிக்க நடன கோஷ்டியின் நடனத்துக்கு என்னை ம்யூசிக் அகடமிக்கு அழைத்துச் சென்றபோது அந்த கீதாஞ்சலியைச் சந்தித்தேன்.

(தொடரும்)

## காட்சி-1

இடம்: ஓர் அரசாங்க அலுவலகம். (டைப்பிஸ்ட் கணபதி வேகமாக வந்து அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரைத் தேடுகிறார்)

**கணபதி:** ஏம்பா மூர்த்தி, அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டர் எங்கே? மணி பத்தரை கூட ஆகலை. அதுக்குள்ளே அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டர் ஆபீஸர் ரூமுக்குப் போயிடுச்சா? ஏன்யா, இப்படி அக்கிரமம் பண்றாங்க?

**மூர்த்தி:** இனிமே கரெக்ட் டைமுக்கு வந்துடணும்னு சொல்லிட்டு, அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரை ஆபீஸரே வந்து எடுத்துட்டுப் போயிட்டார். ஆபீஸர்னா அப்படித்தான் அடாவடித்தனம் பண்ணுவாங்க. நாம அவங்களைக் கேக்க முடியுமா?

# டிஸிப்ளின் இல்லேன்னா எப்படி?



**கணபதி:** ஆபீஸுக்கு எப்படிய்யா கரெக்ட் டைமுக்கு வர முடியும்? கேக்கறதுக்கு ஒரு நியாயம் வேண்டாம்? பஸ், கரெக்ட் டைமுக்கு வருதா? வந்தாலும் ஏற முடியுதா?

**மூர்த்தி:** இந்தக் காலத்திலே எவன் ஸார் நியாயப்படி பேசறான்? நீங்களும் நானும்தான் நியாயத்தைப் பத்திக் கவலைப்படறோம். நாடே கெட்டுப் போச்சு ஸார்.

**கணபதி:** சரி,சரி மூர்த்தி! ஒரு முக்கியமான வேலையா வெளியே போக வேண்டியிருக்கு. யாராவது கேட்டா, காண்டீனுக்குப் போயிருக்கேன்னு சொல்லி சமாளிச்சுக்க. நான் ஒரு மணி நேரத்திலே வந்துடறேன்.

**மூர்த்தி:** போயிட்டு வாங்க ஸார். நான் பாத்துக்கறேன். எங்கே அவ்வளவு அர்ஜெண்டாப் போறீங்க?

**கணபதி:** டிரைவிங் லைஸென்ஸ் எடுக்கணும். 11 மணிக்கு வரச் சொல்லியிருக்காங்க. கரெக்ட் டைமுக்குப் போனாத்தான் கொடுப்பாங்க. அப்படியே வரும்போது-ரேஷன்லே பாமாயில் கொடுக்கறாங்களாம் - அதையும் வாங்கி வீட்லே கொடுத்துட்டு, கரெண்ட் பில் கட்டிட்டு வந்துடறேன். நம்ம கடமைகளை நாமதானே செய்யணும்?

**மூர்த்தி:** எவ்வளவு பொறுப்புணர்வோட நடந்துக்கறீங்க ஸார் நீங்க? சரி...சரி.. போங்க.. ஆபீஸர் கேட்டா நான் ஏதாவது சொல்லி சமாளிச்சுக்கறேன். நீங்க வந்த பிறகு நான் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போகணும். டெல்லியிலேயிருந்து என் மச்சினன் வரான்.

## காட்சி-2

இடம்:ஆர்.டி.ஓ அலுவலகம்.

**கணபதி:** ஸார்... டிரைவிங் லைஸென்ஸுக்கு மனு போட்டிருந்தேன். இன்னைக்கு வரச்சொல்லியிருந்தாங்க.

**ஊழியர்:** (தலை நிமிராமல் ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறார்.)

**கணபதி:** ஸார்..டிரைவிங் லைஸென்ஸுக்கு...

**ஊழியர்:** வேலை செஞ்சுகிட்டிருக்கும் போது ஏன் கழுத்தறுக்கறீங்க? என்ன வேணும்?

**கணபதி:** டிரைவிங் லைசென்ஸ்...

**ஊழியர்:** டிரைவிங் லைசென்ஸை நான் என்ன கையிலேயா வெச்சுக்கிட்டிருக்கேன்? என் கிட்டே கேட்டா என்ன அர்த்தம்?

**கணபதி:** யார்கிட்டே கேக்கணும்?

**ஊழியர்:** எனக்குத் தெரியாது. என் சப்ஜெக்ட் வேறே.

**கணபதி:** என்கொயரியிலே கேட்டேன். உங்க ஸீட்டுக்குப் பக்கத்து ஸீட்டுன்னு சொன்னாங்க.

சத்யா

**ஊழியர்:** பின்னே? தெரிஞ்சுக்கிட்டே என்னைக் கேக்கறீங்களே. கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. வருவாரு.

**கணபதி:** அவர் எங்கே போயிருக்காரு?

*(ஊழியர் மீண்டும் மும்முரமாக எழுத ஆரம்பித்து விடுகிறார்.)*

**கணபதி:** மன்னிக்கணும். அவர் எங்கே போயிருக்கார் ஸார்...?

**ஊழியர்:** டீ குடிக்கப் போயிருக்கார். ஒரு ரெண்டு அவர் வெயிட் பண்ணுங்க. வந்தா ஒரும் வந்துடுவார்.

**கணபதி:** (கோபத்துடன்) என்ன ஸார் இது? இப்படி பொறுப்பில்லாமல் நடந்துக்கிட்டா எப்படி? ஒரு லைசென்ஸ் வாங்கறதுக்கு நான் எத்தனை நடவைதான் வர்றது?





எப்ப வந்தாலும் ஸீட்லே ஆள் இல்லைன்னா என்ன அர்த்தம்? கேக்கறதுக்கு ஆளே இல்லையா?

**ஊழியர்:** ஏன் இல்லை? புகார்களைக் கேக்கறதுக்குன்னு ஒரு ஆபீஸரைப் போட்டிருக்காங்க. வேணும்னா போய் அவர்கிட்டே போய் கம்ப்ளெய்ண்ட் பண்ணுங்க. கேட்டுக்குவாரு. உங்களுக்கும் உங்க கஷ்டத்தை இன்னொருத்தர் கிட்டே சொல்லிக்கிட்ட மாதிரி இருக்கும். அதோ அந்த ஸீட்தான். ஆபீஸர், ஸீட்டுக்கு வந்தா நீங்க தாராளமா கம்ப்ளெய்ண்ட் பண்ணலாம்.

### காட்சி-3

**இடம்:** ரேஷன் கடை

*(கணபதி பையுடன் க்யூவில் நிற்கிறார்.)*

**கணபதி:** சே! எவ்வளவு நேரம்யா? ஒரு ஆளுக்கு அரை மணி நேரம் எடுத்துக்கிட்டா எப்படி?

**ஊழியர்:** எங்களுக்கென்ன நாலு கையா இருக்குது? மத்தவங்க எல்லாம் காலையிலே ஏழு மணியிலேர்ந்து நிக்கறாங்க. நீங்க பனிரெண்டு மணிக்கு வந்துட்டு சட்டம் பேசறீங்களே?

**கணபதி:** கொஞ்சம் அவசரமாப் போகணும்பா.



**ஊழியர்:** அப்ப போங்க. போயிட்டு நாளைக்கு வாங்க. இருட்டோட வந்து க்யூவிலே நின்னுடுங்க.

**கணபதி:** நாளைக்கு பாமாயில் ஸ்டாக் இருக்குமா?

**ஊழியர்:** அதை எப்படி இப்ப சொல்ல முடியும்?

**கணபதி:** வந்தது வந்தாச்சு. வாங்கிட்டே போயிடறேன்.

**ஊழியர்:** சரி, அப்ப நில்லுங்க. லஞ்ச்சுக்குப் போயிட்டு மூணு மணிக்கெல்லாம் வந்துடறேன்.

**கணபதி:** 12 மணிக்கே லஞ்ச்சுக்குப் போனா எப்படி? ஒரு மணி வரைக்கும் டூட்டி டைம்தானே?

**ஊழியர்:** இன்னைக்குப் பசங்களுக்கு அரைநாள் பள்ளிக்கூடம் ஸார். அவங்களை வீட்டுக்குக் கொண்டு போய் விட்டுட்டு வர வேணாமா? மனிதாபிமானமே இல்லாமல் பேசறீங்களே?

## காட்சி – 4

*(இடம்:மின் அலுவலகம்)*

**கணபதி:** ஸார்,கரெண்ட் பில் கட்டணும்.

**ஊழியர்:** அக்கவுண்ட் க்ளோஸ் பண்ணியாச்சு ஸார். நாளைக்கு வாங்க.

**கணபதி:** இவ்வளவு சீக்கிரமா? சாயங்காலம்தானே க்ளோஸ் பண்ணுவீங்க?

**ஊழியர்:** நான் மத்தியானம் அரை நாள் லீவு ஸார்...

**கணபதி:** இந்த ஒரே ஒரு பில் மட்டும் போட்டுக் கொடுத்திடுங்களேன். ப்ளீஸ்...

**ஊழியர்:** அக்கவுண்ட் க்ளோஸ் பண்ணிட்ட பிறகு எப்படி வாங்க முடியும்? கவர்மெண்ட் ரூல்ஸ் தெரியாமப் பேசறீங்களே? பார்த்தா படிச்ச ஆள் மாதிரி தெரியுது...

**கணபதி:** உங்களுக்குப் பதிலா வேறே யாராவது வாங்கிக்குவாங்களா?

**ஊழியர்:** வந்தார்னா வாங்கிக்குவார்.

**கணபதி:** வருவாரா?

**ஊழியர்:** தெரியாதுங்க. இன்னைக்கு இந்தியா-இலங்கை ஒரு நாள் கிரிக்கெட் மேட்ச் நடக்குதில்லே...? வர்றது சந்தேகம் தான். நானே அதுக்குதான் போயிட்டிருக்கேன். வரட்டுங்களா? நீங்களும் போய் மேட்ச் பாருங்க. பிரமாதமா இருக்கும்.

## காட்சி–5

*இடம்: கணபதியின் அலுவலகம்*

**கணபதி:** சே! போனதே வேஸ்ட். ஒரு வேலை கூட நடக்கலை. எங்கே போனாலும் வீட்லே ஆள் இருக்க மாட்டேங்கறாங்க. யாருக்குமே பொறுப்புணர்ச்சி இல்லே. வாங்கற சம்பளத்துக்கு வேலை செய்ய வேண்டாமா? கேக்கறதுக்கே ஆள் இல்லாமப் போச்சு. இவங்களையெல்லாம் சஸ்பெண்ட் பண்ணணும்.

**மூர்த்தி:** கரெக்ட். இந்த நாடு உருப்படாது. தெரிஞ்ச விஷயம்தானே!

**கணபதி:** மறுபடியும் நாளைக்குத்தான் போய் ட்ரை பண்ணணும். யாராவது என்னைத் தேடினாங்களா?

**மூர்த்தி:** சொல்ல மறந்துட்டேனே! ஆபீஸர் ரெண்டு தடவை கூப்பிட்டாரு. நீங்க ஸீட்லே இல்லேன்னதும் கண்டபடி சத்தம் போட்டார். உங்களை சஸ்பெண்ட் பண்ணிட்டார். மச்சினனை அழைச்சிட்டு வர ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கூடப் போக முடியலை. சஸ்பென்ஷன் ஆர்டர் தயார் பண்றதுக்கே நேரம் சரியா இருந்தது. இந்தாங்க, சஸ்பென்ஷன் ஆர்டர். இதுலே ஒரு கையெழுத்து போடுங்க.

**கணபதி:** சஸ்பென்ஷனா? எனக்கா? என்னய்யா இது அக்கிரமமா இருக்குது? ஸீட்லே ஆள் இல்லேன்னா சஸ்பென்ஷனா? கேக்கறதுக்கு ஆளே இல்லையா? எப்ப பார்த்தாலும் ஸீட்லேயே உட்கார்ந்திருக்க முடியுமா? மனுஷன், டீ காபிக்கு வெளியே போக மாட்டானா? நானே கேக்கறேன் அந்த ஆள் கிட்டே!

## காட்சி–6

*இடம்: ஆபீஸர் அறை*

**ஆபீஸர்:** நோ! நத்திங் டூயிங். நான் ரொம்ப ஸ்ட்ரிக்டான ஆபீஸர். என்னைப் பொறுத்தவரை டிஸிப்ளின்தான் முக்கியம். போய் எக்ஸ்ப்ளனேஷன் எழுதிக் கொடுங்க.

**கணபதி:** ஸார்... ஊழியர்களின் உரிமையோட விளையாடாதீங்க! இதென்ன வெள்ளைக்காரன் ஆட்சியா இப்படி நீங்க கெடுபிடி பண்றதுக்கு? இது சுதந்திர நாடுங்கறதை ஞாபகம் வெச்சுக்குங்க. ஸ்ட்ரைக் பண்ண வேண்டிய அவசியத்தை எங்களுக்கு ஏற்படுத்திடாதீங்க. போர்..! வெற்றி வேல்! வீர வேல்! இறுதிவரை போராடுவோம்.

**நண்பர்:** (ஆபீஸரிடம்) என்ன ஸார் ஆச்சு? ஏன் உங்க டைப்பிஸ்ட் சத்தம் போட்டுட்டுப் போறார்?

**ஆபீஸர்:** பின்னே என்ன ஸார்? என் ஒய்ஃப் கார் அனுப்பச் சொல்லி ஃபோன் பண்ணா. கார் அனுப்பலாம்னு பார்த்தா டிரைவரைக் காணோம். என் டாட்டருக்கு எல்.கே.ஜி. அட்மிஷனுக்கு அப்ளிகேஷன் டைப் பண்ண வேண்டியிருந்தது. இந்த டைப்பிஸ்டைத் தேடினா, இந்த ஆளும் ஸீட்லே இல்லை. மனுஷனுக்குக் கோபம் வராதா? டிஸிப்ளின் இல்லேன்னா எப்படி? அதான் சஸ்பெண்ட் பண்ணிட்டேன்.

---

புரொட்யூசர் : காலேஜ் பசங்களை சட்டுனு சென்டிமென்டலா டச் பண்ற மாதிரி ஒரு தலைப்பு சொல்லுங்க!

கதாசிரியர் : 'ஆத்தா... நான் அரியர்ஸ் வச்சிருக்கேன்!'

– காரைக்குடி ஆர். பாபு



# ஒரிஜினல் வைரம் செதுக்கும் பயிற்சி

## இந்திய அரசு - தொழில் அமைச்சுத்துறை

மதராஸ் டைமண்ட் தயாரிப்பாளர் அசோஸியேஷன் (Regd)
மற்றும்

## ராயல் டைமண்ட் டிரெய்னிங் இன்ஸ்டிட்யூட்

6, இரண்டாம் குறுக்குத் தெரு, கஸ்தூரிபா நகர், அடையாறு, சென்னை - 600 020.
ஆகியோர் இணைந்து நடத்தும் பயிற்சி.

**பயிற்சிக்காலமும் இடமும்:** சென்னையில், ஆறுமாத காலத்திற்கு பயிற்சித் திட்டம் நோக்கம்: ஒரிஜினல் வைரங்களை பட்டை தீட்டுவது மெருகேற்றுவது ஆகியவை பற்றியும், இயற்கை வைரத்தின் பல்வேறு பண்புகளைக் குறித்து, தீவிர போதனைக் கல்வி அளிப்பதும் ஆன பயிற்சித் திட்டம். (கடந்த வருஷ ஏற்றுமதி மதிப்பு ரூ.8313 கோடி ரூபாய்)

**தகுதி:** பத்தாவது பாஸ் செய்திருக்க வேண்டும். வயது 18-க்கு மேல்.

**பாடத்துக்குரிய கட்டண தொகை:** முழுப் பயிற்சித் திட்டத்துக்கு ரூ.6,500/- (இரு தவணைகளில் செலுத்தலாம்)

**ரிஜிஸ்ட்ரேஷன்:** சேர விரும்புவோர் தமது விவரங்களை (பெயர், வயது, கல்வித் தகுதி, விலாசம்) ஆகியவை எழுதி கீழ்க்காணும் விலாசத்துக்கு உடன் அனுப்பவும்.

To
**டைரக்டர் சிறுதொழில் சர்வீஸ் இன்ஸ்டிட்யூட், (G & C Section)**
**இந்திய அரசு - தொழில் அமைச்சுத்துறை,**
**65/1, ஜி.எஸ்.டி. சாலை,**
**கிண்டி, சென்னை - 600 032.**

அல்லது ராயல் டைமண்ட் டிரெய்னிங் இன்ஸ்டிட்யூட்டுக்கு நேரடியாய் அனுப்பலாம்.

இண்டர்வியூ தேதி... (தபால் மூலம் தெரிவிக்கப்படும்)
ஹாஸ்டல் வசதி... பயிற்சியாளரின் செலவில் ஏற்பாடு செய்யப்படும்.

**இந்திய அரசின் சான்றிதழ் அளிக்கப்படும்.**

---

# ஒரிஜினல் வைரம் தரம் பார்த்தல்



**தங்களிடம் தனி நபர்கள் ஒரிஜினல் வைரத்தைக் கொண்டுவந்து, நிறம், கட்டிங், தெளிவுத்தன்மை, காரட் நிறை, காளிசாட் (தோஷம்), லால்சாட், தூதக்,பள்ளம், குமிழ், இறுக்கத்தால் விரிசல், மயிரிழை விரிசல், நிறம், புளுஜாகர், நுட்பமான வெண்மை, வெண்மை, உலோகத் தன்மையுடன் வெண்மை, டாப்லைபட் ப்ரெளன், டாப்லைட் நிறம் ஆகியவற்றை சோதித்துக் கொள்ளலாம். செதுக்கிய பட்டைகள் சரியாக உள்ளதா என்று சீர்பார்த்தல் - அதாவது - டேபிள், ஸ்டார்பேஸட், கைட் பேஸட், அப்பர் கிரிடில் பேஸட், கிரிடில், லோயர் கிரிடில் பேஸட், ஆரோபேஸட் ஆகியவைகளை குறைந்த சார்ஜில் பரிசோதித்து கூறப்படும்.**

## S.P. நாயுடு

டைரக்டர் மற்றும் கரெஸ்பாண்டெண்ட்
ராயல் டைமண்ட் ட்ரெயினிங் இன்ஸ்டிட்யூட்

தலைவர்: மதராஸ் டைமண்ட் தயாரிப்பாளர் அஸோஸியேஷன்
எண்:6, இரண்டாம் குறுக்குத் தெரு, கஸ்தூரிபா நகர், அடையாறு, சென்னை - 20.
போன்: 411699 413399 பேக்ஸ்: 416910 Grams: ESTATE



''ஹெலிகாப்டரில் போய் பைனாகுலர் மூலம் முதல்வர் இன்னைக்கு வெள்ளச் சேதத்தைப் பார்வையிட்டாராம்!''

''இறங்கிப் போய்ப் பார்க்கலாமே...?''

'' போங்க ஸார், இதுக்கே அவருக்கு ஜலதோஷம் பிடிச்சிக்கிச்சி!''



''என்னய்யா இது அக்கிரமம்... 'பெட்ரோல் சேமியுங்கள்'னு பிரசாரம் செய்யறீங்க... உங்க முதல்வர் போகும் போது ஏன் இத்தனை கார்கள்.. தொண்டர்கள்...?''

''எங்க முதல்வருக்குத் தெரியாதா? எவ்வளவு சிக்கனத்தைக் கடைப் பிடிக்கிறார் பாருங்க! இவ்வளவு பேரையும் ஃப்ளைட்டில் கூட்டிப் போனால் எவ்வளவு செலவாகும்!''

''நேரு விளையாட்டு அரங்கில் முதல்வர் கால்பந்தாட்டத்தைத் தொடங்கி வைத்தாரே, அந்த நேரம் ஒரு, கால்பந்தை முதல்வரிடம் கொடுத்துப் பெயர் வைக்கச் சொல்லியிருந்தால் என்ன பெயர் வைத்திருப்பார் தெரியுமா?''

''சுப்ரமணியசாமி!''

- ஏ.வி. கிரி.



## பாலகுமாரன்

போராடும் பெண்மணிகள் ........22.00
சிநேகமுள்ள சிங்கம் ..........40.00
காதல் வெண்ணிலா ............22.00
நானே எனக்கொரு போதிமரம் ....33.00
இனி என் முறை ..............30.00
ஆசை என்னும் வேதம் ........40.00
என் கண்மணி ..................22.00
அகல்யா .......................24.00
மெர்க்குரிப் பூக்கள் ..............42.00
கரையோர முதலைகள் .........38.00
என்றென்றும் அன்புடன் .........27.00
காவல் நாகம் .................22.00
எட்ட நின்று சுட்ட நிலா .......24.00
விசிறி சாமியார் ...............22.00
கந்தரி கண்ணால் ஒரு சேதி ......24.00
ஆசைக் கடல் ................44.00
அடுக்கு மல்லி .................24.00
நெல்லுச் சோறு ................38.00
வன்னிமரத்தாலி ................30.00
இரவல் கவிதை ................28.00
அன்புக்குப் பஞ்சமில்லை ........26.00
ஆனந்த வயல் ................40.00
ஒரு வழிப் பாதை ..............27.00
கிருஷ்ண அர்ஜுனன் ............22.00
தாயுமானவன் .................38.00
முன்கதைச் சுருக்கம் ...........30.00
சின்ன சின்ன வட்டங்கள் .......25.00
திருமணத் தீவு ................24.00
உறவில் கலந்து உணர்வில் நனைந்து 23.00

பந்தயப் புறா ..................46.00
வர்ண வியாபாரம் ..............36.00
இனியெல்லாம் சுகமே ..........50.00
தலையணைப் பூக்கள் ...........38.00
வில்வமரம் ....................20.00
பலாமரம் .....................24.00
கனவுகள் விற்பவன் ............48.00

## சுஜாதா

ஸ்ரீரங்கத்து தேவதைகள் ........20.00
வைரங்கள் ....................16.00
என்றாவது ஒரு நாள் ..........19.00
வசந்தகால குற்றங்கள் ...........28.00
அடுத்த நூற்றாண்டு ...........24.00
கனவு தொழிற்சாலை ...........47.00
கரையெல்லாம் செண்பகப்பூ ....30.00
ஒரு பிரயாணம் ஒரு கொலை ...15.00
ஆதலினால் காதல் செய்வீர் .....19.00
நிஜத்தைத் தேடி ...............20.00
இரயில் புன்னகை ..............14.00
தங்க முடிச்சு .................24.00
பிரிவோம் சந்திப்போம் – I .....26.00
பிரிவோம் சந்திப்போம் – II ....40.00
அப்பா அன்புள்ள அப்பா ......13.00
அனிதாவின் காதல்கள் .........42.00
இசைகண்டேன் வான் கண்டேன் ..22.00
மறுபடியும் கணேஷ் ...........26.00
பதினாலு நாட்கள் .............15.00
ஆயிரத்தில் இருவர் ............16.00
எதையும் ஒருமுறை ............20.00
ஊஞ்சல் .....................30.00

ராஜாஜி

"நான் திரும்பிப் போய் ராமனிடம் என்ன சொல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்? உம்மைக் கண்டு பேசியதற்கு என்ன அடையாளம் சொல்லுவேன்?" என்று ஹனுமான் கேட்டான்.

இதைக் கேட்டதும் சீதைக்குப் பழைய நினைவுகள் வந்து விட்டன. கண்களில் நீர் பெருகிற்று.

தனக்கும் ராமனுக்கும் மட்டுமே தெரிந்த அந்தரங்க நிகழ்ச்சிகளை ஹனுமான் தன் நாதனிடம் சொன்னால் தன்னைக் கண்டதற்கு அடையாளமும் ஆகும், தன் ஆற்றாமை நிலையையும் காட்டும் என்று இயற்கை வேகத்துக்கு இசையச் சில விஷயங்களைச் சொன்னாள்.

"என்னுடைய ராமன், தண்டக வனத்தில் ஒருவராக நின்று அசுரர்களை நிர்மூலம் செய்த வீரர், இந்த லங்கையை ஏன் இன்னும் அழிக்காமலிருக்கிறார்? அவரால் ஆகாதது ஒன்று உண்டா? ஒரு நாள் நானும் ராமனும் சித்திர கூடத்தில் ஆற்றங்கரையிலிருந்த வனத்தில் விளையாட்டாக அலைந்து, ஓய்ந்து போய் ஒரு இடத்தில் உட்கார்ந்தோம். என் மடியில் அவர் சாய்ந்து அப்படியே தூங்கினார். அப்போது ஒரு காக்கை வந்து என்னை மார்பில் கொத்தித் தொந்தரவு பண்ணிற்று. நான் அதை ஓட்டினேன். திரும்பத் திரும்ப வந்து தொந்தரவு செய்தது. நான் ஒரு சிறு கல்லை எடுத்து அதன் மேல் வீசினேன். அப்போதும் அது கேட்கவில்லை. ராமன் எழுந்து நான் கஷ்டப்பட்டுக் கண்களில் நீர் ததும்பியிருந்த நிலையைக் கண்டு முதலில் சிரித்தார். பிறகு என் உடலில் காக்கையால் கொத்தப்பட்டுக் காயமாயிருந்ததைக் கண்டு, இந்தக் காக்கையானது காக்கை அல்ல. அசுரன் என்பதைக் கண்டு அஸ்திரம் ஒன்று எறிந்தார். அது அவனைத் துரத்தித் துரத்திச் சென்று அசுரன் தப்பிப் பிழைக்க முடியாமல் கடைசியாக வந்து என் நாதன் காலில் விழுந்து சரணடைந்து பிழைத்தான். இதைச் சொல்லுவாய். நான் இன்னும் பல நாள் காத்திருக்க முடியாது. சீக்கிரம் வந்து என் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்."

இவ்வாறு சொல்லி விட்டு அழுதாள். மறுபடியும், "இன்னொரு நாள் நாங்கள் இருவரும் தனியாக வனத்தில் நடந்து சென்று கொண்டிருந்தோம். நடந்து நடந்து களைத்துப் போய் வியர்வை வழிந்து நெற்றியிலிருந்த திலகம் கரைந்து போயிற்று. நாதன் வேடிக்கையாக ஒரு மலைப் பாறையிலிருந்த செந்தாதுவைத் தேய்த்துத் தானே என் முகத்திலிட்டார். இது அவருக்கு நினைவிருக்கிறதா என்று கேட்டுப் பார்!" என்றாள்.

இப்படிப் பழைய நிகழ்ச்சிகளைச் சொல்லச் சொல்லத் தன் தற்கால நிலையை நினைத்து மறுபடியும் துயரத்தில் மூழ்கினாள்.

"ராமனுக்கு நான் ஏதேனும் சொல்ல வேண்டுமா, என்ன? அவர் அறியாதது என்ன இருக்கிறது? நான் சொல்லியா அவருடைய தருமத்தைத் தட்டி எழுப்ப வேண்டும்? நாதனை நான் நமஸ்கரித்தேன் என்று மட்டும் சொல்லுவாய், போதும். அவர் பக்கத்தில் லக்ஷ்மணனும் இருக்கிறான். அவனுக்குச் சமானமான ஒரு தம்பி உண்டா? ராமனுக்குத் துணையாக இருக்கவே

சக்கரவர்த்தித் திருமகன்




பிறந்தவன். நிகரற்ற சாமர்த்தியம் பெற்றவன். என் நாதன் அவன் முகத்தைப் பார்த்துத் தந்தையை இழந்த துயரத்தை மறந்தார். ஒரு களங்கமுமற்ற பரிசுத்த இதயம், பயம் என்பது தெரியாத வீரன். வனத்தில் தன் தாயை மறந்து விட்டு என்னைத் தாயாகப் பாவித்து வந்தவன். என் துயரத்தை அகற்ற வேண்டும் என்று அவனுக்குச் சொல்லுவாய்'' என்றாள்.

ஜானகியின் கண்களில் கண்ணீர் பெருகி, பேச்சுத் தடுமாறிற்று. ராமன் மானைத் தேடி வெகு தூரம் சென்று விட்ட சமயத்தில் இளைய பெருமானைத்தான் கோபித்து மிக அநியாயமாகக் குற்றம் சாட்டினாள் அல்லவா? இது சீதையின் உள்ளத்தை வருத்திக் கொண்டிருக்க வேண்டும்.

**உ**யிரை நீக்க நிச்சயித்த சமயத்தில் வந்து தனக்கு ஆறுதல் தந்த ஹனுமானை விட்டுப் பிரியவும் மனமில்லை; சீக்கிரம் அவன் க்ஷேமமாக ராமனிடம் சேர்ந்து செய்தி சொல்ல வேண்டும் என்றும் ஆசை. இரண்டும் சேர்ந்து சீதையை இவ்வாறு ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமாகவும் பேசச் செய்தது.

முடிவில், ''அப்பனே, இதோ என் விவாக காலத்தில் என் தாய் கொடுத்து தசரத மகாராஜன் என் தலையில் சூட்டிய சூடாமணி. இதை என் நாதனிடம் தருவாய்'' என்று தன் ஆடைத் தலைப்பில் முடிந்திருந்த அந்த தெய்வீக ஆபரணத்தை அவிழ்த்தெடுத்து மாருதியினிடம் தந்தாள்.

விவாக காலத்தில் தாயிடம் பெற்றதும் மாமன் தசரத மகாராஜன் கையால் சூட்டப்பட்டதுமான அந்த ஆபரணத்தைச் சீதை எவ்வளவு மதித்திருக்க வேண்டும்! மிக வினயமாக மாருதி அதைப் பெற்றுக் கொண்டான்.

பெற்றுக் கொண்டதும் ''கண்டேன் சீதையை'' என்று அதை ராமனிடம் கொடுக்கப் போகும் பெருமையையும் மகிழ்ச்சியையும் எண்ணி ஹனுமானுடைய உள்ளம் அப்போதே ராமனிருந்த இடத்துக்குப் பறந்து சென்று விட்டது; உடல்தான் லங்கையில் நின்றது.

## நினைவூட்டுகிறோம்!

அடுத்தது பாலக்காடு சிறப்பிதழ். பாலக்காடு வாசகர்களின் 'படைப்புப் படையெடுப்பு'கள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் 15.3.94.

- ஆசிரியர்.

---

''பிரியமுள்ள வானரமே! என்னுடைய துக்கத்தைத் தீர்ப்பதற்கு வேண்டிய யோசனைகளையெல்லாம் நீதான் ராமனுக்குச் சரியாகச் சொல்லி வெற்றி சம்பாதித்துத் தர வேண்டும்'' என்றாள். சொல்லியதும் ஹனுமான் புறப்படப் போனான். மறுபடியும் சீதை,

''ஹனுமானே, ராஜகுமாரர்கள் இருவருக்கும் என் அன்பைச் சொல்லுவாய். சுக்ரீவனுக்கும் வானரப் பெரியோர்களுக்கெல்லாம் என் அன்பைச் சொல்லுவாய். துயரக் கடலை நான் தாண்டுவதற்காக ராமனுக்கு எல்லாச் சகாயமும் அவர்களைச் செய்யச் சொல்லுவாய். நீதான் ராமனுக்கு உற்சாகம் தளராமல் சொல்ல வேண்டிய யோசனைகளையெல்லாம் சொல்ல வேண்டும்'' என்றாள்.

''துக்கத்தை அகற்றிக் கொள்வீர். நிச்சயம் ராமலக்ஷ்மணர்கள் வானரப் படையுடன் லங்கா தீவில் இறங்கி அரக்கர்களை அழித்து உம்மை வெற்றியுடன் திருப்பிக் கொண்டு போவார்கள். ஒரு சந்தேகமும் படாமல் இருப்பீராக''என்றான் மாருதி.

''இங்கே எங்கேயாவது நீ ஒரு நாள் இருந்து தங்கி இளைப்பாறித் திரும்புவது நல்லதல்லவா? உடனே போக வேண்டுமா?'' என்றாள். மறுபடியும் சீதை, ''உன்னைப் பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடைந்தேன். என் துக்கத்தை மறந்தேன். மறுபடி நீ மறைந்ததும் நான் துக்கத்தில் மூழ்குவேன். நீ இந்தப் பெருங்கடலைத் தாண்டி வந்தாய். ராமனும் அவருடைய சேனையும் எப்படி இந்தக் கடலைத் தாண்டப் போகிறார்கள்? இதைப் பற்றி உன் யோசனை என்னவோ!'' என்று மறுபடியும் சந்தேகப்பட ஆரம்பித்தாள்.

''தேவி! நீர் ஒன்றும் ஐயப்பட வேண்டாம். நான் ஒருவன்தான் கடலைத் தாண்டக் கூடியவன் என்று எண்ணினீரோ? அங்கிருக்கும் வானரர்கள் எல்லாரும் என்னைவிட சாமர்த்திய சாலிகள். சுக்ரீவன் மட்டுமல்ல, அவன் படையிலுள்ளவர்களில் பலர் இப் பூமண்டலம் முழுதும் பறந்து சுற்றித் திரியக் கூடிய சக்தி கொண்டவர்கள். இந்தக் கடல் ஒரு பெரிதல்ல! என்னை விட பலசாலிகளும் சாமர்த்தியசாலிகளும் ஆகாய மார்க்கம் செல்லுபவர்களும் ஆயிரக்கணக்காக எங்களில் இருக்கிறார்கள். ஒரு சந்தேகமும் பட வேண்டாம். உண்மையில் எல்லாருமே என்னைத் தோற்கடிப்பார்கள். எல்லாரையும் விட பலசாலியையா தூதனாக அனுப்புவார்கள்? குறைந்தவனாகத் தேடி முதலில் அனுப்பினார்கள். அங்கே இருக்கும் வானரர்களில் பலர் என்னை மிஞ்சினவர்கள். தேவி, துக்கதை விட்டுச் சந்தோஷமாக இருப்பீராக.என் முதுகின் பேரில் இரு ராஜ சிம்மங்களையும் ஏற்றிக் கொண்டு வரப் போகிறேன். வந்து இந்த நகரத்தைப் பாணங்களால் பாழாக்குவார்கள். ராவணனைக் குலத்தோடு அழிப்பார்கள். உமக்கு மங்களம்! எதிர் பார்த்த வண்ணமாக இருப்பீராக! துயரக் கடலைத் தாண்டி அக்கரை ஏறுவீர். துக்கமெல்லாம் ஒரு கனவாகும். வெகு நாட்களில்லை. இரு ராஜகுமாரர்களும் வில் பிடித்து லங்கை வாயிலில் நிற்பதைப் பார்ப்பீர். இந்த அரக்கர் கூட்டம் அழிவதைப் பார்ப்பீர்! வானர சேனை வந்து குதித்துக் கூத்தாடி லங்கையைப் பாழாக்குவதைப் பார்ப்பீர். சும்மா இருக்க மாட்டார்கள். நான் போய்ச் சொல்லுவது தான் தடை. உடனே கிளம்பி வருவார்கள். தைரியமாக இருப்பீராக'' இவ்வாறு சொல்லி தேவியைத் தலைவணங்கி நமஸ்கரித்துப் புறப்பட்டான்.

''நான் உயிருடன் இருக்கிறேன் என்று ராமலக்ஷ்மணர்களுக்குச் சொல்லுவாயாக. காரியங்களைத் துரிதப்படுத்துவாயாக. மங்களம்'' என்றாள் சீதை.

அஞ்சநா தேவியின் வீரகுமாரன், ஜானகியின் சோகத்தைத் தீர்த்த மகானுடைய அடி பணிவோமாக!

(தொடரும்)

# சேமிப்பின் மதிப்பு பெருக...!

**கொ**ஞ்சம் சேமித்து இருக்கிறீர்களா? அதன் மதிப்பைப் பெருக்க வேண்டுமா? பின்வரும் நிறுவனங்களில் முதலீடு செய்வதில் நற்பயன் அளிக்கும் வாய்ப்புக்கள் மிகுதி.

## MADRAS REFINERIES LTD

அரசுத் துறை நிறுவனங்களில் ஒன்று எனினும், நன்றாக-லாபகரமாக-நடந்து வருகிறது. சென்னை அருகே மணலியில் நிறுவப்பட்டுள்ளது. இப்போது இதன் மூலதனம் பின் வருவோருக்குச் சொந்தம்:

மத்திய அரசு 67.70%; யூனிட்டிரஸ்ட் போன்ற மியூச்சுவல் ஃபண்டுகள் 16.92%; தேசிய இரானிய எண்ணெய் நிறுவனம் 15.38%.

பெட்ரோலியப் பொருள்களுக்கு நாளுக்கு நாள் தேவை அதிகரிப்பதால், இந்நிறுவனம் விரிவாக்கம் செய்யவும் புதிய கிளைகள் விட்டுப் படரவும் எண்ணுகிறது. இதற்கு ரூ.553 கோடி தேவைப்படுகிறது. இதனைப் பகுதி அளவில் பூர்த்தி செய்ய 2,36,93,600 பங்குகளை விநியோகிக்க இருக்கிறது. பத்துரூபாய் பெருமானமுள்ள ஒவ்வொரு பங்கையும் ரூ.70 கூடுதல் விலை தந்து ரூ.80க்குத்தான் பெற வேண்டும். என்றாலும் இன்று இதன் பங்குகள் மார்க்கெட்டில் ரூ.185க்கு விலை பேசப்படுகின்றன என்பதைப் பார்க்க, கூடுதல் விலை அதிகமில்லைதான். மார்ச்23 முதல் விண்ணப்பங்கள் பெறப்படுகின்றன. அதிர்ஷ்டமிருந்து உங்களுக்குப் பங்குகள் ஒதுக்கப்படுமானால் அறுவடை அமோகம்தான்.

## M.M.FORGINGS LTD

'கொல்லன் பட்டறை' என்று சொல்வோம். ஸ்டீலைப் பழுக்கக் காய்ச்சி பல்வேறு வடிவங்களில் தட்டிக் கொட்டி உருவாக்கும் காரியம்தான். இன்றைய இயந்திர உலகில் ஏகப்பட்ட ஸ்டீல் பாகங்கள் தேவைப்படுகின்றன. அவற்றை இயந்திரங்களே உருவாக்குகின்றன. இத்தகைய தொழிலகங்கள் பலவும் சக்கைப்போடு போடுகின்றன.

இந்த நிறுனமும் அவ்வாறே லாபகரமாக இயங்கி வருகிறது. தென் இந்தியாவிலிருந்து அயல்நாடுகளுக்கு மிக அதிகமாக ஏற்றுமதி செய்யும் நிறுவனம் இதுவே. இதற்காகத் தொடர்ந்து நான்கு ஆண்டுகளுக்கு பாராட்டிதழ்கள் பெற்றது. தற்போது இந்த நிறுவனம் ஆண்டொன்றுக்கு 6000டன் உற்பத்தி என்பதை 15000 டன்னாக உயர்த்த எண்ணுகிறது. இதற்கு ரூ.17.65 கோடி தேவை. வங்கிகள், நிதி நிறுவனங்கள் ஆகியவற்றின் முதலீடு போக, பொது மக்களுக்கும் பங்குகளை விநியோகிக்கிறது. ரூ.25 கூடுதல் விலைக்கு 12,200 பங்குகளை வழங்குகிறது. அதாவது ரூ.10 பங்கை ரூ.35 கொடுத்துப் பெற வேண்டும். இந்த நிறுவனத்தின் எதிர்காலம் பிரகாசமாக இருப்பதாகவே தோன்றுகிறது. பங்கு மார்க்கெட்டில் இதன் பங்குகளின் மதிப்பு உயர வாய்ப்புகள் மிகுதி.

## SHOPPERS INVESTMENT AND FINANCE CO.

'ரெடிமணி' என்ற வியாபாரப் பெயர் இன்று மிகப் பிரபலமடைந்து விட்டது. தவணை முறையில் பல வீட்டு உபயோகப் பொருள்களை வாங்க உதவுகிறது. கடந்த மூன்று ஆண்டுகளில் ஏகப்பட்ட முன்னேற்றம். 22 சதம் லாபப் பங்கீடு. கடந்த ஆண்டு (ஜூன் 93 முடிய) ரூ.551 லட்சம் முதலீட்டுக்கு ரூ.386 லட்சம் லாபம்! தற்போது விரிவாக்கத்துக்குத் தேவைப்படும் தொகையில் ஒரு பகுதியை மக்களிடம் மூலதனமாகக் கோருகிறது. ரூ.10பெறுமானமுள்ள பங்கை ரூ.12க்கு வழங்குகிறது. 49,67,500 பங்குகள் விநியோகிக்கப்படுகின்றன. தற்போது இந்த நிறுவனத்தின் பங்குகள், மார்க்கெட்டில் ரூ.20க்கு விலை போகின்றன. எதிர்காலமும் ஏற்றமுடையதாகவே தோன்றுகிறது.

## தனலட்சுமியும் தொழில் வளர்ச்சியும்.

நிறுவனங்கள் பலவும் மூலதனம் கோரி மக்களிடம் வரும்போது அதைக் கண்காணித்துக் கட்டுப்படுத்துவது SEBI என்ற அமைப்பு. இது பல வங்கிகளுக்கு, பங்குகள் விநியோக நிர்வாகத்துக்கு அங்கீகாரம் அளிக்கிறது. அங்கீகாரம் பெற்ற வங்கிகள் தாம் பங்கு மார்க்கெட்டுக்கு வரும் நிறுவனங்களுக்கு யோசனைகள் கூறி, பங்குகளின் விநியோகத்தை நிர்வகிக்க முடியும் (Merchant Bankers). இத்தகைய ஓர் அங்கீகாரத்தை SEBI சமீபத்தில் தனலக்ஷ்மி வங்கிக்கு அளித்துள்ளது. நாட்டின் தொழில் வளர்ச்சியில் தனலக்ஷ்மி முன்னிலும் அதிகமாக இனி ஒத்துழைக்க முடியும்!

– வி.கோபாலன்




◆ ஜெயலலிதாவின் ராசி என்ற தலையங்கத்தைப் படித்தேன். தங்கள் சார்பாகவும் தமிழக மக்களின் சார்பாகவும் செல்வி ஜெயலலிதா அவர்களுக்கு ஜலலலிதா என்ற சிறப்பான பட்டத்தை அளிக்கிறேன்.

சிதம்பரம், இராம. சபாநாயகம்.

◆ உமக்கு நிச்சயம் "ஜெ ராசி" கிடையாது! "வாசகர் ராசி" எப்போதும் உண்டு!

சென்னை - 114, ரமணி சுதர்சனம்.

◆ திருவையாறு உற்சவத்தில் "சுகன்யா" கலந்து கொண்டதும் படப்பிடிப்பு நடத்தியதும் எப்படிப் புனிதத்தைக் கெடுக்க இயலும்? தியாக ராஜர் பெருமையை உயர்த்தும் படமாகவே குன்னக்குடி தயாரிக்க விரும்பி இருக்கலாம். இதில் என்ன தவறு?

சென்னை - 15, ஆ. கணபதி.

◆ முதலில் விழாக் கமிட்டியினரின் சம்மதத்தை வாங்கியிருக்க வேண்டும். அப்புறம் வித்வான்கள் எல்லோரும் பாடும் காட்சியை எடுத்து விட்டு, உற்சவம் முடிந்த பின் சுகன்யாவைத் தனியாகப் பாட வைத்து எடுத்து இந்த நிகழ்ச்சியுடன் எடிட்டிங் மூலம் இணைத்திருக்கலாம்.

கோயமுத்தூர், ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ 'குடி நீரா? லிட்டர் என்ன விலை?' கட்டுரை படித்தேன். வேதனை, வேதனைதான். வசதியானவர்கள் வேண்டுமானால் காஸ்சிலிண்டர் போல் தண்ணீர் சிலிண்டரையும் வரவழைத்துக் கொள்ள முடியும். ஆனால் ஏழை, நடுத்தர மக்கள், குடி நீர் சுத்திகரிப்பு சாதனங்களை வாங்க முடியுமா இன்றுள்ள விலைவாசியில்?

கொடுமங்கலம், ஆர். ஆறுமுகம்.

◆ வடக்கே வருகை செய்யும் தலைவர்கள் பற்றிய செய்தி படித்து வியந்தேன். நம் தலைவர்களை மிஞ்சிய சேவை உணர்வு. மக்கள் தொடர்பு நிகழ்ச்சியின் மகத்துவத்தை நமது தமிழக மாண்புமிகுக்கள் படிக்காமலிருக்க வேண்டுமே என இறைவனை வேண்டிக் கொண்டேன்.

மருங்கூர், பாலகிருஷ்ண மூர்த்தி.

◆ கபிலை அட்டையில் போட்டு அசத்தி விட்டீர்கள். அதே வேளையில் முன்னாள் சாதனைவீரர் ஹெட்லியையும் மறக்காமல் போட்டதுடன் கபிலைப் பற்றி ஒரு கிரிக்கெட் வீரரிடமே பேட்டி கண்ட விதம் அருமை. தன் கிரிக்கெட் வாழ்க்கையில் கபிலுடன் பெற்ற அனுபவங்களை நயம்பட எடுத்துரைத்திருந்தார்.

செம்பட்டி, சோ. இராமு.

◆ கபில் - அலசல் என்றவுடன் நிஜமாலுமே நிறைய எதிர்பார்த்தோம். இப்படி, சிவராமகிருஷ்ணனிடம் பேட்டி வாங்கி இரண்டே பக்கத்தில் போட்டு கடுப்படித்து விட்டீரே. கபிலின் தோஸ்த் நம்மூர் கிருஷ்ணமாச்சாரி ஸ்ரீகாந்திடமாவது இரண்டொரு வார்த்தை கேட்டிருக்கலாம்... ம்.... காய வைத்துவிட்டீர்.

சேலம், கே. ராஜபாலு.

◆ டாக்டர்களால் கை விடப்பட்ட குழந்தை பட்டத்தரசி அம்மன் சந்நிதியில் போடப்படவும், அக்குழந்தை விளையாடி வது என்ற செய்தியைப் படித்ததும் அந்த அம்மனை தரிசிக்க மனம் ஆவலாகத் துடிக்கிறது.

ஸ்ரீவில்லிபுத்தூர், தேனம்மாள் ராமசாமி.

◆ அரைத்த மாவையே அரைக்கிறார் துணுக்கு எழுத்தாளர் வே. செந்தில்! 10.2.94 குமுதம் பத்திரிகையில் ஏற்கெனவே வெளியான ("உங்க பையன் சிகரெட் குடிக்கறானே, நீங்க கேட்கக் கூடாதா?" - "ச்சீ... அவனோட எச்சில் சிகரெட்டை நான் எதுக்குக் குடிக்கணும்?") அவரது துணுக்கை 'கண்டல்' என்ற வார்த்தையை சிகரெட்டுக்கு பதில் மாற்றி உருமாற்றம் செய்துள்ளார்.

சென்னை - 116, திரு. சிவா.

◆ 'காட்டு ருசி'யின் மூலம் உழைப்பின் உயர்வையும், விவசாயக் குடும்பத்தில் உள்ள தம்பதியர் பரஸ்பரம் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ளும் அன்பின் வெளிப்பாட்டையும் தெள்ளிய நீரோடையாய்க் காட்டிய ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

பரமக்குடி, வே. ஈஸ்வரன்.

◆ வீராயி என்னும் ஒரு குப்பைக்காரி சிறுகதை படித்தேன். புருஷனை விட்டுப் பிரிந்து வந்தாலும் மனக சுத்தமாக இருந்து அனாதைக் குழந்தையை எடுத்து வளர்க்கும் அவளை நினைத்துப் புல்லரிக்கிறது.

எம்.கே.பாளையம், கோ. கல்யாணசுந்தரம்.

◆ 'பாச மலர்கள்' விமர்சனம் மிகச் சரியாக எழுதப்பட்டிருந்தாலும், ஆபாசமில்லாமல் ஒரு தமிழ்ப்படம் எடுத்த சுரேஷ் மேனனை ஒரு வார்த்தை பாராட்டியிருக்கலாம்!

மதுரை, வி.பி. மகராசி.

**பாப்பையா**



**பக்கம்**

**ஊ**ருக்குக் கிழக்கால ஒரு ஆலமரம். அந்த மரத்துக்குக் கீழே ஒரு கிழடு! மரத்துக்கு வயசச் சொல்ல முடியாமத் திணர்றது போல கிழடுக்கும் வயசைச் சொல்ல முடியலை. 'ஆடைக்கும் கோடைக்கும்' அங்குனதான் கிடக்கும். அது எப்ப எந்திரிக்கும், குளிக்கும், சாப்பிடும்னு யாருக்கும் தெரியாது. ஊருக்குள்ள வராது. ஆனால் ஊரில இருக்கிறவங்க எல்லாரையும் தெரியும். சிலரைப் பார்த்துச் சிரிக்கும்; பலரைப் பார்த்து முகம் சுளிக்கும். ஏன் அப்படி? யாரும் எளிதாச் சொல்லிற முடியாது.

எங்க கிராமமே குதிச்சிருச்சி. மந்திரி போயிட்டாரு. இன்னைக்குக் காலையில ஒவ்வொரு வீட்லயும் கல்யாணக் களை! யாரைப் பாத்தாலும் மந்திரி பேச்சுத்தான். எவருக்கும் கூடப் புது ரத்தம் ஏத்துன மாதிரி தான். நம்பிக்கை, மனுஷனை எப்படித்தான் மாத்திருது? நிமிர்ந்துதான் நடந்தேன்!

சாயுங்காலம் நேத்து முழுக்கப் போட்ட மைக் சத்தம், மந்திரி கொடுத்த புது ரத்தம், இதைக் கேட்ட பிறகாவது அந்த ஆலமரக் கிழடு ஏதாவது பேசாதா? எனக்குள்ளே ஒரு ஆசை. மெல்ல ஆலமரத்தடிக்குப் போனேன். அன்னைக்கின்னு என்னவோ கிழடு மரத்துல சாஞ்சி உக்காந்திருந்திச்சி. எனக்கு அது ஆச்சரியம். இன்னைக்கு ஏதாவது பேசும் போல இருக்கே! பக்கத்தில் உக்காந்தேன். அது எதையும் கண்டுக்கல.

''பெரியவரே! நேத்து மந்திரி வந்து பேசுனாரே, கேட்டீங்களா?'' நான் பேச்சைத் தொடங்கினேன். பெரியவர் பதில்

# “அவரு வந்தார், இவரு வந்தார் ஆடினார்- முடிவில் எவருக்குமே தெரியாம ஓடினார்!”

கிராமத்துக்குள்ள எப்போதாவது மைக் கட்டிப் பாட்டுப் போடுறது தான். இப்பத் தான் எதுக்கும் மைக் போடுறதுன்னு வந்துருச்சே. முத நாள் அந்தக் கிராமத்துக்கு ஒரு யோகம்! சுதந்திரம் வாங்கி இம்புட்டுக் காலம் ஆச்சு; ஆனா எம்.எல்.ஏ.கூட ஜெயிச்ச பெறகு அந்தக் கிராமத்துக்கு வந்ததில்லை. அவ்வளவு சின்ன கிராமம். ஆனா அந்தக் கிராமத்துக்கு ஒரு மந்திரி வந்து மேடை போட்டு அரை மணி நேரத்துக்கு மேலப் பேசுனார்னா நம்ப முடியுதா? என்னாலயுந்தான் இப்பவும் நம்ப முடியலை! ஆனா நடந்துச்சே!

பேச்சுன்னா எப்படிப் பேச்சு! நிலமில்லாதவங்களுக்கு நிலம்! இருக்க வீடு, உழுகிறதுக்கு நிலம், படிச்சவங்களுக்கு வேலை, இப்படியே அந்த மந்திரி அடுக்கிக்கிட்டுப் போனதைப் பார்த்துக் கிணறு தோண்டுறவன் ஊத்தைக் கண்டதும் குதிக்கிற மாதிரி

சொல்லலை. என்னை நிமிர்ந்து பாத்தார்.

'மந்திரி..மந்திரி' என்று அடுக்கினேன். மெல்லச் சிரிச்சாரு. மேக்காலப் பாத்தாரு. அவ்வளவுதான். 'நம்ம கிராமத்துல இருக்குற எல்லாருக்கும் நிலம், வீடு, வேலை தரப் போறாராம்!'

''தரலையா? கைவசமா வச்சிருந்தா அவ்வளத்தையும் எடுத்துட்டு வந்து குடுத்துட்டுப் போயிருக்கலாமில்லை?''

''நீங்க ஒன்னு! இதெல்லாம் கொண்டு வந்து குடுக்கிற சமாச்சாரமா?'' எனக்குச் சிரிப்பு வந்தது. கிழடும் சிரித்தது.

''ஏன்? வேற எங்க இருந்தும் வாங்கிக்கிட்டு வரணுமோ?''- விளங்காமத் தான் கேக்குதா, வேணுமின்னே கேக்குதா? கண்டுபிடிக்க முடியலை.

''நிலமெல்லாம் இங்கதான் இருக்கு. பட்டா வேணுமில்லை?''

''பட்டா இல்லாட்டி? குடிசை நிக்

காதா? பயிரு வெளையாதா?''

''திக்கும், வெளையும். அதிகாரி தக ராறு பண்ணுவாரே?''

''அவரு யாரு, உன் ஊர்க்காரர் தானே! நீ உள்ளூர்க்காரன்னு அவருக்குத் தெரியு மில்லை? நீ உழுகிறது உனக்காகவும் ஊருக் காகவுமின்னு அவருக்குத் தெரியாதா?''

''தெரியும்; அது என்னவோ அரசாங்க சட்டமின்னு சொல்றாங்களே?''

''சொல்லட்டும்! நகரத்தில இருக்கிறவங்களுக்கு அது சரி. கிராமத்தில் தாயா பிள்ளையா இருக்கிற உங்களுக்கு என்ன? நீங்க தானே அரசாங்கம்? நீங்க போடச் சொல்றது தானே சட்டம்!''

''பெரியவரே! என்னத் தையோ போட்டுக் குழப்புறீங்க. பட்டா இல்லைன்னா நாளைக்கு ஆத்திர அவசரத்துக்கு அடை மானம் வைக்கவும் முடியாது. விக்கவும் முடியாதே?''

''ஆக, உனக்கு வைக்கவும் விக்கவும் பட்டா வேணும். உழைக்கிறதுக்கு இல்லை?''

''நீ இம்புட்டுக் கிறுக்க வக்கக்கிட்டுத்தானா பேசாம கிடந்த! உன் பேச்சைக் கேட்டு அவனவன் இஷ்டத்துக்கு நிலத் தைப் பிடிச்சா ஊரு என்னத்துக்கு ஆகும்? ஆளாளுக்கு அடிக்கக் கிட்டுச் செத்துப் போக மாட்டாங் களா?''

''அப்படிச் சொல்லு! ஊரு எப்படிப் போனாலும் சரி. நான் நல்லா இருக்கணுங்கிற சுய நலம் உனக்குள்ள ஊறிக் கிடக்கு. எது எதுக்கெல்லாமோ ஊரு கூடிப் பஞ்சாயத் துப் பண்றீங்களே, உங்க ஊருக்குள்ள இருக்கிற நிலத்தில பிழைப்புக்கு வழி தேடிப் பஞ்சாயத்துக் கூடக் கூடாது? நூறு வீட்டுக்காரங்க- நீங்களே உங்களுக்கு வழி தேடாம, நூறு ஆயிரம் வீட்டுக்கு வழி காட்டப் போறதாச் சொல்லிக்கிட்டு வார மந்திரிய நம்பி மனப்பால் குடிச்சிக்கிட்டு அலையுறீங்களே! இன்னும் இந்த மண் ணுக்கு வந்து சேராத வானத்து நட்சத்திரங் களோட ஒளி கூட ஒரு காலத்தில் வந்து சேர லாம்; ஆனா இந்த மந்திரியோட வார்த்தை இருக்கே, அதோட பலன் நம்ம கிராமத் துக்கு ஒரு நாளும் வந்து சேராது!

'அவரு வந்தார், இவரு வந்தார்; ஆடி னார் - முடிவில்

எவருக்குமே தெரியாம ஓடினார்'

இப்படி ஒரு பாட்டுச் சத்தம் நேத்துப் பூரா ஊருக்குள்ளே இருந்து வந்துச்சே, அதான் உண்மை... என்னால அதிகம் பேச முடியலை; நீ போயிட்டு நாளைக்கு வா'' பெரியவர் படுத்து விட்டார்.



இந்தக் கிழம் எந்தக் கோபத்தில் இப் படிப் பேசுது என்று எண்ணிக்கிட்டே அடுத்த நாள் போய்ப் பார்க்கிறேன். கிழம் அல்ல; கட்டை கிடந்தது! எனக்கு உப தேசம் செய்யத்தானா இவ்வளவு காலம் காத்திருந்தது! அதன் உடைமைகளைச் சோதித்துப் பார்த்தேன். தியாகத்திற்கு விலை பேசாத சுதந்திரப் போராட்ட வீரர்! அவர் போல் வாழ முடியவில்லை; வணங்குகிறேன்.

– சாலமன் பாப்பையா

---

''கோவில்ல யாரோ பிக்பாக்கெட் அடிச்சுட்டாங்க!''

''அடப் பாவமே... பர்ஸ்ல எவ் வளவு பணம் இருந்தது?''

''பர்ஸ் இல்லே... செருப்பு டோக் கனை அடிச்சிட்டு செருப்பை வாங் கிட்டுப் போயிட்டான்!''

- ந. கணபதி.



# கலைஞரின் அடுத்த போர்வாள் ஆகும் தகுதி யாருக்கு?





* தேர்வுக்கு எதிர்ப்பு



* மறைவு பற்றி...



* சிரிப்பு வர்ணனை



* 91 வயது அண்ணன்

## நீங்கள் கேட்டவை - தராசு

● சி. சீனிவாசன், திருத்துறைபூண்டி.

? கலைஞரின் அடுத்த போர்வாள் ஆகின்ற தகுதி தி.மு.கவில் யாரிடம் உள்ளது?

! அவர் வாள் வைத்துக் கொள்கிற வழக்கத்தையே விட்டு விட்டதாகக் கேள்வி!

● எஸ்.என். ராகவன், பெல்லாரி.

? மறைந்த நடனக் கலைஞர் கோபி கிருஷ்ணா பற்றி...

! அவரது முதல் படமான ஜனக் ஜனக் பாயல் பாஜே ஒன்று போதுமே, சாந்தாராமுடன் சேர்த்து அவரையும் ஆயுசுக்கும் நினைவில் வைத்துக் கொள்ள!

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிபட்டி.

? ஆமை வேகத்தில் திட்டங்களை அமுல் படுத்துவதால் பல கோடி ரூபாய் இழப்பு ஏற்படுவதாகப் பிரதமர் கூறியிருக்கிறாரே?

! ஆமை வேகத்தில்தான் இதைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். இதைத் தவிர்க்க இதை விட ஆமை வேகத்தில் நடவடிக்கை எடுப்பார்கள்!

● ஆர். கார்த்திகேயன், மதுரை.

? நியாயவிலைக் கடையில் பெறப்படும் பொருள்கள் எடை குறைவாக உள்ளன. அரசு ஏன் நடவடிக்கை எடுப்பதில்லை?

! அரசு, நியாய விலைக்கடை என்றுதான் சொல்கிறதே தவிர, நியாய எடைக்கடை என்று பெயர் சூட்டவில்லையே!

● பி. ராஜா, மதுரை.

? ஜனதா தள கட்சித் தலைவராக வி.பி. சிங் தேர்வுக்கு சந்திரசேகரும் ஹெக்டேயும் எதிர்ப்பு தெரிவித்துள்ளது பற்றி....?

! லண்டன் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் சிங்கிடம் ஒரு வார்த்தை கூடக் கேட்காமல் அவரைத் தலைவராக்கியது தவறுதானே! மேலும் ஜனநாயக மரபுகளைப் பின்பற்ற வேண்டும் என்று சிங்கே கூறியிருப்பதைத்தான் ஹெக்டே எடுத்துக் காட்டியிருக்கிறார். அதற்காக, காங்கிரஸ் ஏஜெண்ட் என்று முத்திரை குத்துவதா?

● வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.

? ராம் லக்கன் சிங் யாதவுக்கு அமைச்சர் பதவி கிடைத்திருப்பது குறித்து?

! நம்பிக்கை இல்லாத் தீர்மானம் தோற்க, ஏழுபேரின் ஆதரவைத் திரட்டித் தந்ததற்குக் கைமேல் பலன்.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? கல்வி வரி விதிக்க திட்டம் தீட்டப்படுவது பற்றி...?

! வரி கட்டாய வசூலாகும்; கல்வி ஏனோ தானோ ஆகிவிடும். லைப்ரேரி செஸ் கதைதான்!

● த. இளஞ்சேரன், கொளப்பாடு.

? குஜராத் முதல்வர் சிமன்பாய் படேல் மறைவு குறித்து?

! அவருக்கு முந்தைய காங்கிரஸ் முதல்வர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது உட்கட்சிப் பூசல் தலைவிரித்து ஆடியது. சிமன்பாய் தலைமையில் - அடங்கியது. இரண்டாவது தொழில் துறை வளர்ச்சியில் தொடர்ந்த கவனம். இப்போது அவர் மனைவி ''நான்தான் அடுத்த முதல்வர்'' என்று வாரிசு உரிமை கொண்டாடுவதுதான் இடிக்கிறது.


* சொல்லும் செயலும்


* விடுதலை குறித்து...


* ஆலை வேண்டும்!


* விபத்துக்குப் பிறகு...

● முருகேசன், தேனி.

? இன்று நாட்டில் அச்சமின்றி வாழ்பவர் யாராக இருக்க முடியும்?

! சேஷன். தேவாரம் விபத்துக்கு உள்ளான பிறகு ஒருவேளை சந்தனக் கடத்தல் வீரப்பனும் கூட!

● இரா. திலிப், திருச்சி.

? சமீபத்தில் தங்களை அறியாமல் சிரித்த சம்பவம்?

! ''ஜெ. காங்கிரஸ்'' என்று வாழப்பாடியாரே தம்மில் சிலரை வர்ணித்தது.

● ஆர். கர்ணன், பெத்தரெங்கபுரம்.

? பாரதம் மிகச் சிறிய நாடான ஜப்பானிடம் கை நீட்டி மானியம், கடன் என்று பெறுவது பற்றி....?

! பரப்பளவை வைத்து வல்லரசுகள் நிர்ணயிக்கப்படுவதில்லை. ஆற்றலிலும், உழைப்பிலும் மிகப் பெரிய நாடு ஜப்பான். அதை விடச் சிறிய சிங்கப்பூரும் அப்படியே!

● எஸ். அருளானந்தம், காரைக்கால்.

? தமிழக அரசே தேங்காயைக் கொள்முதல் செய்ய வேண்டும் என்று தென்னை உற்பத்தியாளர்கள் கோரிக்கை விடுத்துள்ளனரே?

! அரசுத்துறை ஆதிக்கம் குறைய வேண்டும் என்று நாடெங்கும் முயற்சி கள் நடக்கும் போது இப்படி ஒரு கோரிக்கையா? 'ரிஸ்க்' இல்லாத வியாபாரத்தை விரும்புகிறார்கள் போலும். பட்டால்தான் தெரியும்!

● எம். திருஞானம், சீகாழி.

? சர்வாதிகாரம் தலைதூக்கும்போது பத்திரிகைகளின் செயல்பாடு எவ்வாறு இருக்கும்?

! சர்வாதிகாரத்தையும் ஜனநாயகம் என்று வர்ணிக்கவேண்டிய நிர்ப்பந்த நிலையில் இருக்கும்.

● பவானி கிருஷ்ணா, கும்பகோணம்.

? ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கு அச்சாணி போன்றது எது?

! தொழிலாளர்கள். அந்த அளவில் அண்மையில் பவள விழா கொண்டாடிய தென் பிராந்திய ரயில்வே சங்கமும் அச்சங்கத்தோடு பொன்விழா காலத்துக்குத் தொடர்புடைய அதன் தலைவர் டி.வி. ஆனந்தனும் பாராட்டுக்குரியவர்கள். ''வேலை நிறுத்தம் என்பது ஆக்க பூர்வமான போராட்டமல்ல, எந்தப் பிரச்னைக்கும் பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்வு காண முடியும்'' என்பது 91 வயதாகும் ஆனந்தனின் நம்பிக்கை. 80,000 தொழிலாளர்கள் ''அண்ணனின்'' கருத்தைப் பிரதிபலித்து நடந்து கொள்கிறார்கள். தொழிற்சங்கவாதிகள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை உணர்த்த, தொழிற்சங்கக் கல்லூரி ஒன்றையும் நடத்துகிறது இச்சங்கம்!

● தா. சிந்துகுமார், திருவட்டார். ❑

? 'சினிமா படங்களுக்கான விளம்பரங்களைக் கால்பக்கத்துக்கு மேல் நாளிதழ்களில் வெளியிட வேண்டாம்' என அறிவுரை வழங்கும் முதல்வர், அரசு விளம்பரங்களைத் தமது படத்தோடு முழுப்பக்கங்களாக வெளியிடுவது ஏன்?

! இது தெரியாதா? அது படாதிபதிகளின் சொந்தப் பணமாச்சே என்ற கரிசனம். இது மக்களின் வரிப்பணம்தானே என்ற அலட்சியம்.

● என்.ஆர். சுப்பிரமணியம், பூனாம்பாளையம்.

? நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் டாக்டர்களுக்குப் பொருந்தாது என்ற உயர் நீதி மன்றத் தீர்ப்பு...?

! தீர்ப்புக்குத் தலை வணங்க வேண்டியது நம் கடமை என்றாலும் பல டாக்டர்களுக்கு அவர்கள் கடமையை உணர்த்த வேண்டிய நிலை உள்ளதே, அதற்கு என்ன வழி என்றுதான் புரியவில்லை!

● முகமது மீரான், ரெட்ஹில்ஸ்.

? பூலான் தேவி விடுதலை செய்யப்பட்டது குறித்து?

! அவருக்கு அளிக்கப்பட்டிருந்த வாக்குறுதியை மீறி மேலும் பல காலம் சிறையில் வைத்திருந்துதான் விடுவித்துள்ளனர். அவர் மனம் மென்மை அடைந்திருக்கும் என்று நம்புவோம்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
தா. சிந்துகுமார்,
16/85, தானுபவன்,
திருவட்டார் - 629 177.
குமரி (மா. வ).

# வீட்டைப்பாரு நாட்டைப்பாரு

இதோ படம் ஆரம்பிக்கும், இதோ படம் ஆரம்பிக்கும் என்று காத்திருந்தால், முடிந்தே விட்டது! ஓஹோ, இதுதான் படமாக்கும் என்று கற்பனை செய்து கொண்டு வெளி வர வேண்டியதுதான்!

படத்தால் பெறப்படும் கருத்து என்னவென்றால், அரசியலால் கெட்டுப் போகாதே. இதைச் சொல்ல இப்படி ஒரு கதையா? தேவையா! தந்தை சிவகுமார். தனயன்கள் சரவணன், விஜய். அரசியலில் கடைமட்டக் கண்மணிகள். கட்சிக்காக என்னென்னவோ செய்கிறார்கள். பொதுநலம்! அதனால் வீடு தவிக்கிறது. ஏகக் கஷ்டம். போதனைமூலம் தெரிவிக்கின்றார் தந்தை.

ஜெயந்தி, சிவகுமார் காம்பினேஷன். சொதப்பல் டைலாக்கிலும் உணர்ச்சிக் கொப்பளிப்பு. விஜயிடம் மெச்சூரிட்டி தெரிகிறது. சரவணன் பாப்பா. ரஞ்சிதாவும் அதுவே. (போட்டோவில் பாருங்கள். ஆளின் வடிய வில்லை?)

கேவலமான காமெடி. வெ.ஆ.மூர்த்தி, ஜனகராஜ், எஸ்.எஸ்.சந்திரன் என்று ஆளுக்கு ஆள் பிடுங்கிவிடுகிறார்கள். நிம்மதியாய்ப் படம் பார்க்க விடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்!

தேவா இசை. பின்னணிமட்டும் சந்திரபோஸ். இரண்டிலும் தக்கு ஞாண்டு வித்தியாசமில்லை. பாடல் எப்படி ஞாபகத்தில் நிற்காமல் போக வேண்டும் என்பதில் பட்டம் வாங்கியிருப்பார்கள் போலும்! பாடலாசிரியர் புதியவர். கும்பலோடு கோவிந்தா!

தக்கர் பச்சான் காமிரா. ஒளியும் ஒலியுமில் பேர் வாங்க, பாடல்களை மட்டும் நன்றாக எடுத்திருக்கிறார். நிறைய புகை போகிறது. பனி என்று நம்புவோமாக.

நல்ல விஷயம் சொல்ல நினைத்ததற்குப் பாராட்டுக்கள். ஆனால் சினிமா என்றால் என்ன என்று கற்றுக் கொள்ள வேண்டாமா டைரக்டர்?

- துளசி





✱ இது பம்பாய் சிவாஜிசிலை. பெங்களூர்ச் சிலையின் அமைப்பும் இது போலவே.

# சிவாஜி சிலைக்கு ஆபத்து?

●● பெங்களூரின் சதாசிவ நகர் பகுதியில் திறந்து வைக்கப்பட்டுள்ள சத்ரபதி சிவாஜியின் சிலை பெரிய பிரச்னை ஆகிவிட்டது. 'கன்னடம் அல்லாத எதையும், கன்னடர் அல்லாத யாரையும் அனுமதிக்க மாட்டோம்'- என்ற கன்னடப் பிரியர்களின் (வெறியர்களின்?) உணர்வு களை இந்தச் சிலை கிளறிவிட்டுவிட, ஏகமாய் எதிர்ப்பு. கம்பீரமாய்க் குதிரை மீதமர்ந்து வாள் உயர்த்தும் சிவாஜி, தடபுடலாகத் திறக்கப்பட்டு விட்டார். ஊர்வலம், ரகளை, பஸ் எரிப்புக்கள் எல்லாம் தொடர, தற்சமயம் அரசாங்கத் துக்கு கெடு விதித்திருக்கிறார்கள். ''இத்தனாம் தேதிக்குள் சிலையை அரசாங்கமே அகற்றிவிடவேண்டும்... அகற்றா விட்டால் வெடிவைத்துத் தகர்ப்போம்''என்று அறிவித் திருக்கிறார்கள். ஏற்கெனவே இம்மாதிரியான கலாட்டா, எதிர்ப்பு என்று ஆரம்பித்து, காமராஜர் சிலையையும் திரு வள்ளுவர் சிலையையும் திறக்க விடாமல் செய்து விட்டார் கள். (திருவள்ளுவராவது பீடம்வரை வந்து, மூடப்பட்டிருக் கிறார். காமராஜர் எங்கே இருக்கிறார் என்பதே யாருக்கும் தெரியாது!)

''சிலையை வெடிவைத்துத் தகர்க்காமல் ஓயமாட் டேன்'' என்று மிகவும் ஆவேசப்பட்டிருப்பவர் நடிகர் அசோக். அசோக்கைப் பற்றிய இன்னொரு தகவல்: சென்னை பிலிம் இன்ஸ்டிடியூட்டில் ரஜினிகாந்துடன் ஒன் றாகப் படித்தவர். ரஜினியின் மிக நெருங்கிய நண்பர். 'வள்ளி'யிலும் நடிதிருப்பவர்.

●● வேறு எந்த நகரங்களிலும் இல்லாத அளவு PUB கள் எனப்படும் சாலையோர மதுக்கடைகள் பெங்களூரில் நிறைந்துள்ளன. கல்லூரி மாணவர்கள்தாம் இந்த 'பப்' களை அதிகமாகப் பயன் படுத்தி பீர்களாகக் குடித்துத் தள்ளுகிறார்கள் என்பதால், பகல் நேரங்களில் இவை களைத் திறக்கக்கூடாது என்று உத்தரவு போட்டது அரசாங்கம். ''இது போதாது: பெங்களூரிலுள்ள எல்லா 'பப்'களையும் மூடச் சொல்லி உத்தரவிடவேண் டும்'' என்று கோஷமிட்டது எதிர்க்கட்சி.

அப்படி உத்தரவு போட முடியாது. வேண்டுமானால் இருபத்தோரு வயதுக்குக் குறைந்தவர்கள் பப் களுக்கோ, பார்களுக்கோ



✱ மொய்லி: தானே காவல்

வரக்கூடாது என்று அர சாங்கம் உத்தரவிடும்'' என் றார் மொய்லி.

இது நடைமுறைக்கு ஒத்துவராது. பையன்கள் பாட்டுக்குக் குடித்துக் கொண்டுதான் இருக்கப் போகிறார்கள்'' என்கிறார் ஜனதா தளத்தைச் சேர்ந்த ஜீவ ராஜ் ஆல்வா.

''இல்லை... இருபத் தோரு வயதுக்குக் குறை வானவர்களை அனுமதிக்கக் கூடாது என்பதில் தீவிரமாக இருப்போம். வேண்டுமா னால் நானே 'பப்'களுக்குள் நுழைந்து சோதனையிடு கிறேன்'என்கிறார் மொய்லி. நடக்கிற கதையா இது?

-பெர்னாண்டஸ்

# முழு வேகத்தோடு ஓர் ஆன்மிக அனுபவம்!



சென்னை, காமராஜர் அரங்கத்தில் எக்கச்சக்க ஜனத்திரள். அரசியல், சினிமா, டிவி கவர்ச்சிகளை யெல்லாம் தாண்டி, நகர மக்கள் மெய்ஞானத்தின்பால் ஈர்க்கப்பட்டு, முழு உத்வேகத்தோடு வந்து சேர்ந்த ஓர் ஆன்மிக அனுபவம் சமீபத்தில் நேர்ந்தது. வந்திருப்பவர்: சுவாமி கணபதி சச்சிதானந்தா.

சித்தர், யோகி, முனிவர், ரிஷி, தெய்வீக மருத்துவர் என்று என்னென்னமோ சொல்கிறார்கள். அன்று காமராஜர் அரங்கில்-அவரது குணப்படுத்தும் இசை நிகழ்ச்சிக்கு ஹால் நிரம்பி வழிந்து, வெளியில் பெரிய திரை வைத்து வேறு ஒளிபரப்பிக் கொண்டிருந்தார்கள்.

“என் பாட்டில் ராகம், தாளம், சுவரக் கோர்வை எல்லாம் தேடாதீர்கள். இது உங்கள் உடல் உபாதைகளை நீக்கப் போகும் மருந்து” என்று வினோதமான

# விடுமுறையில் வித்தியாசம்!

இந்த பட்ஜெட் வாரத்தில் வாசகர்களுக்குக் குளுமையாய் ஒரு செய்தி! கல்கி 17.4.94 இதழ் விடுமுறை சிறப்பு மலராக உருவாகி வருகிறது! இந்தத் தமிழ்ப் புத்தாண்டு இதழில் நீங்களும் பங்கேற்கலாம்.

விடுமுறைக்கு வெளியூர் போனபோது நீங்கள் சந்தித்த வித்தியாசமான நபர், அல்லது ஏற்பட்ட வித்தியாசமான அனுபவம் பற்றி போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதியனுப்புங்கள். விடுமுறையில் வெளியூர் சென்றபோது நீங்களே எடுத்த வித்தியாசமான புகைப்படம் இருந்தாலும் அனுப்பி வைக்கலாம். கார்டின் மீதும் புகைப்படம் அடங்கிய உறையின் மீதும் 'விடுமுறையில் வித்தியாசம்' என்று குறிப்பிட்டு, மார்ச் 15 ஆம் தேதிக்கு முன்னதாக எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள்.

பிரசுரமாகும் படங்களுக்கும் குறிப்புகளுக்கும் பரிசு உண்டு. பிரசுரத்துக்கு ஏற்கப்படாத படங்களைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் இணைப்பது அவசியம்.

- ஆசிரியர்

முன்னுரையுடன் ஆரம்பிக்கிறார். சிந்தஸைஸர் வைத்திருக்கிறார். அந்த மேற்கத்தியக் கருவியில் காம்போதி, சாருகேசி, வசந்தா என்று கர்நாடகச் சாறு பிழிகிறார்.

பக்கவாத்தியங்களாக லால்குடி ஜெயராமனும், ஜி.ஜே.ஆர்.கிருஷ்ணனும், ஃப்ளூட் ரமணியும், உமையாள்புரம் சிவராமனும், கே.வி.பிரசாதும், ஏ.கே.ஸி.நடராஜனும், டி.எச்.விநாயகராமும்!

முழுப்பாடலா - பாடலின் பகுதிகளா - அல்லது பாடல்களே அல்லாது வேறென்னவோவா - ஆல் இந்தியா ரேடியோவின் 'வாத்ய விருந்த' மாதிரியான சமாசாரமா- எதுவும் புரியவில்லை. ஆனால் இடத்தை விட்டு அசைய முடியாதபடி கட்டிப்போடும் இசை!

தத்தாத்ரேயரின் வழித்தோன்றலாகச் சொல்கிறார்கள் இவரை. மைசூரில் இவரது ஆசிரமத்தில் எப்போதும் ஜனமயம்! இந்தியா மட்டுமின்றி பல அயல் நாடுகளிலும் ஏராள பக்தர்கள் இவருக்கு. காமராஜர் அரங்கிலேயே பல வெளி நாட்டவரைப் பார்க்க முடிந்தது.

“ஸ்வாமிகள் மிகப்பெரிய சித்தர். அவரது சித்துக்களை உலக நன்மைக்காக மட்டுமே பயன்படுத்துகிறார்” என்று சொல்கிறார் ஒரு பக்தர்.

ஆனால், “சித்து வேலைகளில் எனக்கு எப்போதுமே விருப்பமில்லை. குழந்தைக்குக் கசப்பு மருந்தைக் கொடுக்க வேண்டுமானால் தேனில் குழைத்துத் தருகிறோமல்லவா? அதுமாதிரி என் பணியில் ஏனையோரை இணைத்துக் கொள்ள - முதலில் அவர்களை என்பால் ஈர்க்க- சித்துக்களை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறேன். அவ்வளவுதான்” என்கிறார் ஸ்வாமிகள்.

இலவசக் கல்விக்கூடங்கள், மருத்துவமனை, தினந்தோறும் அன்னதானம் என்று ஏராள நல்ல காரியங்கள் புரிந்து வருகிறார். “லோகக்ஷேமத்தைத் தவிர வேறு சிந்தனை எனக்கு இல்லை” என்கிறார் ஸ்வாமி கணபதி சச்சிதானந்தா.

- ஆழ்வார்க்கடியான்

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; ஸர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.





# ஆகா! நானும் இப்போ ஒரு பாலிசிதாரர்.

எனக்கும் ஆயுள் காப்பீடு செய்தாச்சு!
எங்கப்பா எனக்கே எனக்காக எல்.ஐ.சி.
புதிதாக வழங்கும் ஜீவன் கிஷோர் பாலிசி
எடுத்திருக்காரே! இந்தப்பாலிசி என்னை
மாதிரி மழலைப் பட்டாளங்களுக்காகவே
ஏற்படுத்தப்பட்ட நல்ல திட்டம். நான்
பெரியவனானதும், எனக்கே எனக்கு இந்தப்
பாலிசி மூலம் நிறைய பணம் கிடைக்கும்.
அப்பா மாதிரியே, நானும் பெரிய மனிதன்
ஆவேனே!

ஜீவன் கிஷோர் பாலிசி
எடுத்திடுங்கள்! குழந்தைகளின்
கனவு நனவாகும்!

மேலும் விவரங்களுக்கு, உங்கள் அருகில்
உள்ள எங்கள் கிளை அலுவலகத்தையோ,
முகவரையோ அல்லது வளர்ச்சி
அதிகாரியையோ உடனே அணுகுங்கள்.

Pratibha/LIC/210-91-F/TM

**ஜீவன் கிஷோர்**



லைப் இன்ஷ்யூரன்ஸ்
கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka